# கல்கி

ஸ்ஜீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...




KALKI • 22.03.2009 • ரூ.10.00 • 96 பக்கங்கள்







## மதுரை மாவட்ட ஸ்பெஷல் -I





# கல்கி

22-03-2009



அடுத்த இதழ்

**மதுரை மாவட்ட ஸ்பெஷல் - II**

**ஜாலி அழகிரி!**

**பர்ஸைப் பறிக்கும் பஸ் கட்டணம்!**

**உயிர் பெறுமா உலகத் தமிழ்ச் சங்கம்?**

**கு. ஞானசம்பந்தம் சிறப்புக் கட்டுரை**

**மதுரை மண் மணக்கும் செய்திகளுடன், தயாராகிக் கொண்டிருக்கிறது.**

# நியூஸ் பாய்

ஹீரோயின் ஓரியண்டட் படத்தில் நடிக்க 'விரல் நடிகர்' அதிக ஆர்வம் காட்டு கிறாராம். கதை சொல்லும் இயக்குநரிடம் இவர் கேட்கும் முதல் கேள்வி ஹீரோயின் யார்?

**(ஹீரோயின்கள் பத்திரம்)**

நயன்தாரா - லிங்குசாமி சம்பளப் பிரச்னை ஓய்ந்த நிலையில், லிங்குசாமி இயக்கத்தில் நடிக்கும் தமன்னா, அதிகச் சம்பளம் கேட்டு வேண்டுகோள் வைத்துள்ளாராம்.

**(நீங்களும் பார்க்க வேண்டிய ஆளைப் பார்த்தா கேட்டது தானா கிடைக்கும்)**

இனி புது இயக்குநர்களுக்கு வாய்ப்பு இல்லை என்று முடிவெடுத்திருக்கிறாராம் இளைய தளபதி. காரணம், கதை சத்துள்ள பெரிய இயக்குநர்களின் படங்களில் நடிக்க ஆசை வந்துவிட்டதாம்.

**(எவ்ளோ சத்து?)**

'தல' அஜித் தமது 50-வது படத்தை இயக்க புதுமுக இயக்குநரையும், கதையையும் தேடிக் கொண்டிருக்கிறாராம்.

**('தல' முடிவு என்னைக்குமே அதிரடிதான்)**

பிரபல கேமராமேன் 'திரு'வுக்கு இயக்குநர் ஆசை வந்து விட்டது. முன்னணி ஹீரோவை வைத்துப் படம் பண்ண பேச்சு வார்த்தை மும்முரமாக நடக்கிறதாம்.

**(பேச்சு வார்த்தையைப் படம்பிடிக்க**



வைச்சுக்கோங்க... பின்னாடி உதவும்.)

'தமிழ் என் உயிர் மூச்சு' என்று சொல்லும் புரட்சிக் கலைஞர், தமிழ்நாட்டைச் சேர்ந்த ஹீரோயின்களுக்கு வாய்ப்பு கொடுக்கக்கூடாது என்று தம் நலம் விரும்பும் இயக்குநரிடம் சொல்லி விட்டாராம்.

**(கட்சியிலாவது தமிழர்களுக்கு ஸீட் கொடுங்க ஸார்?)**

'தாம் நடிக்கும் ஒவ்வொரு படத்திலும் கட்டாயம் நமீதா இருக்கணும்' என்று இயக்குநர் கம் நடிகர் சுந்தர்.சி., தம்மை சான்ஸ் கேட்டு அணுகும் இயக்குநர்களிடம் கட்டளை இடுகிறாராம்.

**(நமீதா ராஜ்ஜியத்தில் உய்யலாலா...)**

வி.கே.மீடியா விஷன் தயாரிப்பில், ரஞ்சித் நடிக்கும் படம் ரயிலு. பீஷ்மர் படத்தைத் தொடர்ந்து ரஞ்சித் இயக்கும் ரயிலு படத்தின் பெயரை, தற்போது 'சிந்தை மயங்குதடி' என்று பெயர் மாற்றம் செய்திருக்கிறார்கள்.

**(ரசிகர்களை மயக்குமா?)**

ஷக்தி சிதம்பரம் இயக்கத்தில் லாரன்ஸ், நடிக்கும் ராஜாதி ராஜா படத்துக்கு நகைச்சுவை நடிகர் கருணாஸ் இசையமைக்கிறார். அப்படத்தின் ஆடியோ உரிமையை வாங்க பல பெரிய நிறுவனங்கள் போட்டி போட்டு வருகின்றன. தான் முதன் முறையாக இசையமைக்கும் இப்படத்தின் இசை வெளியீட்டு விழாவை வித்தியாசமாக நடத்த வேண்டும் என்று திட்டமிட்டு வருகிறாராம் கருணாஸ்.

**('லொடுக்கு'ன்னு முடிவெடுங்க ஸார்)**

# சிப்ஸ்



# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : சீதா ரவி
உதவி ஆசிரியர் : கதிர்பாரதி
வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,
ச.கார்த்திகேயன், பா.கோபால்
தொலைபேசி :
044 - 4343 8888 (30 lines)
தொலைநகல் : 044 - 4343 8899
மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு :
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்கள் :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com
சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : ரூ. 3,800/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத்
தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

**மதுரை தந்த ஏராளமான சினிமா நட்சத்திரங்களில் ஒருவர் நடிகர் விவேக். ''கல்கி மதுரை மாவட்ட ஸ்பெஷலுக்காக கொஞ்சம் உங்களோட பிளாஷ்பேக்குக்குப் போய் வரலாமா?'' என்று கேட்டோம். ''ரொம்ப பின்னாடி போனா பிளாக் அண்ட் ஒயிட்டா ஆயிடும். அதனால கலர்ஃபுல்லான காலேஜ்ல ஆரம்பிச்சுக்கறேன்'' என்றார்.**

**டிரவுசர்பாண்டி...?**

**நா**ன் அமெரிக்கன் கல்லூரியில் காலடி எடுத்து வைத்ததே மறக்க முடியாத அனுபவம். என் அம்மாவுடன் காலேஜில் பி.காம்., அட்மிஷனுக்கு, டிரவுசர் சட்டையோடு போனேன். அப்போது பிரின்ஸிபாலாக இருந்த பேராசிரியர் எம்.ஏ. தங்கராஜ், 'அட்மிஷன் யாருக்கு, இந்தப் பையனோட அண்ணனுக்கா?'ன்னு கேட்டார். 'இல்லை. இவனுக்குத்தான். அட்மிஷன் கிடைச்சதும் பேண்ட்-சர்ட் தைச்சு போட்டனுப்புறேன்' என்று அம்மா சொன்னாங்க. அட்மிஷன் கிடைச்சது. அமெரிக்கன் காலேஜில், பேராசிரியர் சாலமன் பாப்பையா சிறந்த மேடைப் பேச்சின் நுணுக்கங்களை உணர்த்தினார். ஆங்கிலப் பேராசிரியர் வசந்தனிடம் நல்ல ஆங்கில அறிவும்,




ஆங்கில நாடகங்கள், உலகத் திரைப்படங்கள் பற்றிய அறிவும் கிடைச்சது. அப்போ மூன்று மணி நேரத்துக்கு நாடகம் எழுதுவேன். சாமுவேல் சுதானந்தா என்ற பேராசிரியர் அதை இருபது நிமிடமாகச் சுருக்கிடுவார். கஷ்டப்பட்டு எழுதினதை மனிதர் இப்படி அநியாயமா வெட்டி எறியறாரேன்னு கடுப்பாக இருக்கும். அப்புறம் சினிமாவுக்கு வந்த பிறகுதான் அவர் செய்ததெல்லாம் சரின்னு புரிஞ்சுது.

**காதல் லுக்...?**

**ம**துரை ஆரிய வைசியர் பள்ளியில் பணியாற்றிய பாரதி மாடசாமி என்ற ஆசிரியர், அண்ணாநகர் பிள்ளையார் கோயிலில் வெள்ளிக் கிழமைகளில் இசைக் கச்சேரி நடத்துவார். அவருக்கு உதவியா நானும்



போவேன். எதுக்கு? அங்கே அழகா சௌராஷ்டிரா பொண்ணு ஒண்ணு வரும். அதைப் பார்த்து 'காதல் லுக்' விடுவேன். நிகழ்ச்சியோட பிரேக்கில் 'ஆயிரம் தாமரை மொட்டுகளே' பாட்டுப் பாடுவேன். ஒருநாள் தில்லா சைக்கிளில் அந்தப் பொண்ணை ஃபாலோ பண்ணி அவ வீடு வரைக்கும்



# ஆயிரம் தாமரை மொட்டுக்களே...

## - விவேக்கின் ஃப்ளாஷ் பேக்

போயிட்டேன். அதோட என் ஒருதலைக் காதலுக்கும் முற்றுப்புள்ளி வெச்சாச்சு.

**பாசக்காரப் பயல்கள்...?**

மதுரை பசங்களுக்கே உள்ள பேரு 'பாசக்காரப் பய'. அந்த அளவுக்கு வெள்ளந்தியாகவும், முரட்டுத்தன மான பாசமாவும் இருப்பாங்க. இன்றளவும் இதில் மாற்றமில்லை. இந்த அன்பை, தன்னுடைய சுயநலத்

துக்காக சிலர் யூஸ் பண்ணிக்கறாங்க. எண்பதுகளின் மதுரையை கண்முன் காட்டிய சுப்ரமணியபுரத்தில், கதாநாயகி கடைசியாக தன் காதலனைக் காட்டிக் கொடுப்பது போல வருது. எங்க ஊர்ப் பொண்ணுங்க சென்டிமென்ட் பார்ப்பாங்க. கண்டிப்பாகத் தன் காதலனைக் காட்டிக் கொடுக்க மாட்டாங்க. அந்தப் படம் பார்த்து வெளியில் வந்தபோது மனது கனத்தது. ஒருவேளை இந்த க்ளைமாக்ஸ் கூட படத்தின் பெரும் வெற்றிக்குக் காரணமாக இருக்கலாம்.

**நாலு இட்லி, எட்டு சட்னி**

''என்ன இவ்வளவு கல்லறைகள் ஓ, ரியல் எஸ்டேட்காரர்கள் நட்டுவைத்த கற்களா?''ன்னு ஒருமுறை கவிதை எழுதினேன். மதுரையின் விவசாய நிலங்களெல்லாம் ஃப்ளாட்டுகளாக மாறிட்டு வர்றதைப் பார்க்கறப்ப இந்தக் கவிதைதான் நினைவுக்கு வருது. மதுரையில் அதிக அளவில் தொழிற்சாலைகள் வரவேண்டும். இன்னும் மருத்துவமனைகள் வேண்டும். மதுரைன்னாலே இரவு நேரக் கையேந்தி பவன்கள் தான் சிறப்பு. நான்கு இட்லிக்கு எட்டுவிதச் சட்னி இங்கே கிடைக்கும். விடிய விடியக் கடைகள் நடத்துவதற்கு இப்போ கட்டுப்பாடுகள் போட்டுட்டாங்க. இதைத் தளர்த்தி, கடைகளை அதிக நேரம் திறந்து வைச்சா நல்லா இருக்கும்.



**"பத்மஸ்ரீ, மலர்க்கிரீடமா... முள்கிரீடமான்னு போகப் போகத்தான் தெரியும்!"**



**ஆடல் காணீரோ?**

காலேஜ் படிப்பை முடிச்சதும் மதுரை தல்லாகுளம் போஸ்ட் அண்ட் டெலிஃகிராப் ஆபீஸில் வேலை செய்தேன். அந்தச் சமயம் ரீஜினல் லெவல் கலாசார போட்டி நடந்தது. மோனோ ஆக்டிங்கில் அக்கா டாக்டர் விஜயலட்சுமி பரதநாட்டியப் போட்டியில் கலந்துக்கச் சொல்லி பரத நாட்டியமும் கற்றுத் தந்தாங்க. ஆடல் காணீரோ, திருவிளையாடல் காணீரோ பாடலுக்கு நாட்டியம் ஆடினேன். மோனோ ஆக்டிங், பரதம் இரண்டிலுமே இரண்டாவதாக வந்தேன். இதன் மூலமாக பாலசந்தர் சாரை சந்திக்கும் வாய்ப்பு கிடைச்சது. இந்த நிகழ்ச்சிக்குப் பின்பு மதுரையில் கலாராணி ராமச்சந்திரனிடம் முறைப்படி பரதம் பயின்றேன்.

**காமெடி டு ஹீரோ...**

ஆரம்பத்துல காமெடியோடு கருத்து சொல்லும்போது, இது தேவையான்னு தோணும். இருந்தாலும் தொடர்ந்து செய்தேன். அதன் பலனாக பத்மஸ்ரீ கிடைத்திருக்கிறதா நினைக்கிறேன். இது முள்கிரீடமா? மலர்க்கிரீடமான்னு போகப் போகத்தான் தெரியும். எனது பொறுப்புகள் இன்னும் அதிகரிச்சிருக்கு.

**- ராகவ்குமார்**

**படங்கள்: ஸ்ரீஹரி**

# நீங்கள் கேட்டவை

● பி.இராஜேந்திரன்,
லோயர் அணைக்கட்டு

**? தேர்தல் கமிஷனர் நரேஷ்குப்தா, தம்மை ஒருமுறைகூட சந்திக்கவில்லை என்கிற முதல்வரின் ஆதங்கம் பற்றி?**

! நரேஷ் குப்தா மீது முதல்வரின் பாய்ச்சல் அபத்தம். குற்றச்சாட்டுகளுக்குப் பதில் கூறி தாம் தேர்தல் கமிஷனுக்கு அனுப்பி விட்டதாகச் சொன்ன நரேஷ் குப்தாவின் அறிக்கையில் கண்ணியம். தேர்தல் கமிஷனுக்கு மக்களின் வரிப்பணம் செலவாகிறது என்பது உண்மையே. கமிஷன், அரசியல்வாதிகளின் தலையீடு இன்றி, சுதந்திரமாகச் செயல்பட வேண்டும் என்பதற்காகத்தான் மக்களின் வரிப்பணம் பயன்படுத்தப்படுகிறதே தவிர, ஆட்சியில் உள்ளவர்களுக்குச் சலாம் போடுவதற்காக அல்ல.

● மல்லிகை மன்னன், மதுரை

**? புதிய தலைமை தேர்தல் ஆணையர் நவீன் சாவ்லா நடுநிலையோடு செயல்பட்டு, லோக்சபா தேர்தலை நடத்தி முடிப்பார் என்று நம்புகிறீர்களா?**

! எனக்கு பாஸிடிவ் திங்கிங் உண்டுதான். அதற்காக எதையும் நம்ப முடியுமா என்ன? இது தொடர்பான வழக்கில், உச்சநீதிமன்றத்தினிடம் எனக்குள்ள நம்பிக்கையாவது பொய்க்காமலிருந்தால் சரி.

● செ.சத்திய சீலன், கிழவன் ஏரி

**? சோம்நாத் சாட்டர்ஜியின் சபாநாயகர் பதவிக்காலம் ஒரு பொற்காலம்; நற்காலம்; முட்காலம் - யார் யாருக்கு? ஏன்?**

! சபாநாயகர் பதவிக்கு - பொற்காலம்

மக்களுக்கு - நற்காலம்

கம்யூனிஸ்டுகளுக்கு - முட்காலம்

● பி.என்.ஜெயகுமார், திருவாரூர்

**? இந்தியா உள்பட, வெளிநாடுகளுக்குப் பணிகளை அவுட்ஸோர்ஸிங் செய்யும் அமெரிக்க நிறுவனங்களுக்கு, வரிச்சலுகை ரத்து செய்யப்படும் என ஒபாமா அறிவித்ததை, பிரணாப் முகர்ஜி கடுமையாக எதிர்த்துள்ளாரே?**

! தனக்கு மிஞ்சிதான் தான தர்மம் என்கிற நோக்கில், பொருளாதார சிக்கல்களைக் களைவதில், ஒவ்வொரு நாடும் பலவித நடவடிக்கைகளைப் பின்பற்றவே செய்யும். அதற்கு எதிர்ப்பு தெரிவிப்பது

# நவீன்சாவ்லா நடுநிலை காப்பாரா?



அபத்தம்.

● க.நா.இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம்

**? ஆஃப்கானிஸ்தானின் மறு சீரமைப்புக்கு இந்தியா மேன்மேலும் உதவ வேண்டும் என்று அமெரிக்கா கோருகிறதே, தலிபான்கள் ஆளுமையில் இருக்கும் ஆஃப்கானுக்கு நாம் ஏன் உதவ வேண்டும்?**

! ஆஃப்கானிஸ்தான் தற்போது தலிபான் ஆளுமையில் இல்லை. அங்கே ஓரங்கட்டப்படுவதால், பாகிஸ்தானில் புகுந்து மையம் கொண்டிருக்கிறது தலிபான். ஆஃப்கன்-பாக் அரசுகள் பலம் பெற்று இணைந்து, தலிபான் இயக்கத்தை ஒடுக்குவதுதான் இன்றைய அதிமுக்கியப் பணி. ஆஃப்கானிஸ்தானின் மறு சீரமைப்புக்கு இந்தியா உதவுவது, முற்றிலும் வேறான, மனிதாபிமான அடிப்படையிலான விஷயம்.

● எஸ்.ராமசாமி, செத்தோடு

**? ஆந்திராவில் சந்திரபாபு நாயுடுவும் சிரஞ்சீவியும் போட்டி போட்டுக்கொண்டு இலவசத் திட்டங்களையும் சலுகைத் திட்டங்களையும் அறிவிக்கிறார்களே - ஆந்திர மக்கள் அதிர்ஷ்டசாலிகள் தானே?**

! அறிவிப்புகளை வாபஸ் பெற முடியாது என்பதால், இலவசங்களும் சலுகைகளும் சிரஞ்சீவித்துவம் பெறும். இவை மக்களின் வரிப் பணத்திலிருந்தே வழங்கப்படுவதால் மக்களின் கஷ்டமும் சிரஞ்சீவித்துவம் பெறும். . அதிர்ஷ்டம், ஆட்சிக்கு வருவோருக்குத்தான்; மக்களுக்கு அல்ல.



✱ முக்கால நாயகர்



✱ எடுபடா எதிர்ப்பு



✱ ஆந்திர...



✱ ...அதிர்ஷ்டம்!

● அ.பேச்சியப்பன்,
ராஜபாளையம்

**? தீவிரவாதத்தை ஒழிக்க இந்தியாவும் பாகிஸ்தானும் இணைந்து செயல்பட வேண்டுமென்று கூறும் முஷாரஃப், தமது ஆட்சிக் காலத்திலேயே அதைச் செயல்படுத்த முயற்சி செய்யாதது ஏன்?**

! அவர் ஆட்சிக்காலத்தில், இந்தியாவுக்கு எதிராகத் தீவிரவாதத்தைத் தூண்டிவிடத்தான் அவர் முயன்றாரே தவிர, ஒழிப்பதற்கு அல்ல. இப்போது தீவிரவாதம் பாகிஸ்தானையே முழுங்கப் பார்ப்பதால் டிராக் மாறிப் பேசுகிறார். இப்போதைய அறிவுரையை, பாகிஸ்தானில் உள்ள ஆட்சியாளர்களிடம்தான் அவர் கூற வேண்டுமே தவிர, நம்மிடம் அல்ல!

● வி.ஜி.சத்தியநாராயணன்,
சென்னை-61

**? ஸ்டாலினுக்கு அண்ணா பல்கலைக்கழகம் கௌரவ டாக்டர் பட்டம் வழங்க**

**❑ ரூ.150/-
பரிசு பெறுபவர் :
செ.சத்தியசீலன்,
கிழவன் ஏரி**

முடிவு செய்திருப்பது பற்றி...?

! நாசூக்காக மறுத்திருந்தால் நன்றாய் இருந்திருக்கும். டாக்டர் பட்டங்கள் மலினப்பட்டுப்போன இன்றைய சூழலில், அப்படி மறுக்கும் உறுதி அவருக்கு இருந்திருந்தால், அதற்காகவே ஒரு டாக்டர் பட்டம் வழங்கலாம்!

● பிரபா லிங்கேஷ், மேலகிருஷ்ணன்புதூர்

? ''தீவிரவாதிகளைக் கட்டுப்படுத்த பாக். அரசு தவறிவிட்டது'' என்று அமெரிக்க ஜனாதிபதி ஒபாமா கருத்து தெரிவித்துள்ளாரே?

! ''தவறு என்பது தவறிச் செய்வது / தப்பு என்பது தெரிந்து செய்வது / தவறு செய்தவன் திருந்தப் பார்க்கணும் / தப்பு செய்பவன் வருந்தியாகணும்'' - கண்ணதாசன் பாடல் ஒபாமாவுக்குத் தெரிந்திருக்க வாய்ப்பில்லை.

● உமரி பொ.கணேசன், மும்பை

? தமிழ்நாட்டில் கூட்டணி குழப்பம் எப்படி உள்ளது?

! மதில்மேல் பூனையாம் விஜயகாந்தின் பாய்ச்சலைப் பொறுத்துத் தெளிவு பெற

★ ரூ. 75/-
பரிசு பெறுபவர் :
பவானிகிருஷ்ணா,
பெங்களூரு



★ அபத்த பாய்ச்சல்



★ இழந்த பட்டம்



★ மதில் மேல் பூனை!



★ ஏல சிங்கம்!

விருக்கிறது.

● கே.தெய்வசிகாமணி, சென்னை - 82

? மகாத்மா உபயோகித்த பொருட்களை, விஜய் மல்லையா ஒன்பது கோடி ரூபாய்க்கு ஏலத்தில் எடுத்து, நாட்டுடைமை ஆக்கிவிட்டாரே?

! காந்தி பெயரில் உள்ள பக்தி / மரியாதையினால் அதைச் செய்திருந்தால், அவருடைய மதுபானத் தொழிற்சாலைகளை இழுத்து மூடட்டும். மீடியா வெளிச்சத்துக்காக மட்டுமே செய்திருந்தால், அவருடன் சேர்ந்து மத்திய அரசும் காந்திஜியிடம் மன்னிப்புக் கோரி, தலை கவிழ்ந்து நிற்கவேண்டியதுதான்!

● பவானி கிருஷ்ணா, பெங்களூரு ★

? அமெரிக்காவில் நிர்வாக நிபுணத்துவம் வாய்ந்த தொழிலில் இந்தியர்கள் 69 சதவிகிதம் பேர் வேலை பார்ப்பதாகவும், அவர்களே அதிகச் சம்பளம் வாங்குவதாகவும் தெரிய வந்துள்ளதே, இது நமக்குப் பெருமையல்லவா?

! இத்தனை அறிவாற்றலையும் நம் நாட்டிலேயே தக்கவைத்துப் பயன்படுத்திக் கொள்ளத் துப்பு இல்லாத நிலையில், அந்த மாதிரி அல்ப சந்தோஷம் கொள்ள வேண்டியதுதான்!

யூத்தின் மனசைப் போல பரந்த புல்வெளி. அதில் கூட்டங் கூட்டமாய் வண்ண ஆடைகளில் மாணவிகளின் வருகையால் வேடந்தாங்கலாய் வேஷங் கட்ட பைக்கில் ஆங்காங்கே நெஞ்சைக் கொள்ளையடிக்கும் முயற்சியில் சாகசம் நிகழ, குளோனிங் பிரபுதேவாக்கள் ஸ்பிரிங்காய் மேடையில் கும்மாளமிட, இத்தனைக்கும் நடுவில் ''எனக்கில்ல... எனக்கில்ல... வேறு எவனோ தட்டிக்கிட்டுப் போகப்போறான்'' என, திருவிளையாடல் தருமியாய் வராண்டாவில் தமிழ்ச்சாரல் போட்டிக்காக எக்ஸாம் கணக்கா ஒத்திகை நடந்து கொண்டிருந்தது. இவையெல்லாம் ஸ்ரீ சிவசுப்பிரமணிய நாடார் பொறியியல் கல்லூரி (SSN)யின் சாரல் தமிழ் மன்றம் மற்றும் கல்கி நிறுவனம் இணைந்து நடத்திய தமிழ் அறிவுத் திருவிழாவுக்காக. மார்ச் 5, 6, 7 ஆகிய மூன்று நாட்களில் நடந்த விழாவில்


● கவிதா

# காற்றைத் தித்திப்பாக்கிய யூத் ஃபெஸ்டிவல்!

பல்வேறு கல்லூரி மாணவர்களும் போட்டிகளில் கலந்து கொண்டு தங்களது தமிழார்வத்தைத் தூண்டிக்கொண்டு, தமிழன்னையைச் சிறப்பித்தனர்...

'சாரல்' நாலுவிதமா பொழிய ஏற்பாடாகியிருந்தது. கல்லையும் கனிய வைக்கும் 'தமிழிசை' போட்டியாகவும், இதமான 'கவியரங்க' கலாட்டாகவும், காட்டமாய் 'மோதிப்பார்' என்கிற பேச்சு யுத்தமாகவும், தமிழைக் கொண்டு 'தமிழ் வேட்டை'யாடும் பிளஸ் மைனஸ் ஆட்டமாகவும் அமைந்திருந்தன.

கைரேகை கரையும் வரை கை குலுக்குவோம்... தமிழால் இதயங்களைச் சேமித்துக் கொள்வோம் என்ற கவிதாவின் வரவேற்புரையோடு துவங்கியது.


● நடுவர்கள்...




*பல கல்லூரிகளிலிருந்து அறுபத்து மூன்று பேர் மோதிய பேச்சுப் போட்டியில், இறுதிச் சுற்றுக்கு பன்னிரண்டு பேர் தேர்வாக... மூன்று நடுவர்கள் நான்கு பேரைத் தேர்வு செய்தனர்.*

''சில வாகனங்களைப் பார்த்து நாய் குரைத்துக் கொண்டே துரத்துகிறது. ஏன்? அதுபோன்ற வாகனத்தில் சகநாய் எப்போதோ அடிபட்டிருக்கும். அதற்கு இருக்கும் இன உணர்வுகூட தமிழனுக்கு இல்லையே!''

- மன்னர்மன்னன்
(பேச்சுப் போட்டியில்)





* சீதா ரவி

கல்கி இதழின் ஆசிரியரும், நிர்வாக இயக்குனருமான திருமதி சீதா ரவி நடுவராக இருந்து, தமிழிசைப் போட்டியில் சிறந்த ஐந்து இளம் பாடகர்களைத் தேர்வு செய்தார். தமிழின் இனிமை, உச்சரிப்பு ஒழுங்கு, அதன் முக்கியத்துவம், இவற்றோடு கல்கியின் தமிழிசைப் பணியை வானவில்லாய் வரைந்து காட்டினார்.



* புனிதமேரி

''ஊரான் ஊரான்
தோட்டத்தில
ஒருத்தன் வெச்சான்
வெள்ளரிக்கா.
காசுக்கு ரெண்டு
விக்கச் சொல்லி
காயிதம்
போட்டான்
வெள்ளைக்காரன்.''



**இன்னொரு சாம்பிள்:**

*''கார்ப்பரேஷன் குழாயில வாட்டரைக் காணோம்; நம்ம ஆப்பரேஷன் தியேட்டர்ல டாக்டரைக் காணோம்.''*

- *'தினேஷ்' தமிழிசைப் போட்டியில்*



* யுகபாரதி




18 கல்லூரியைச் சார்ந்த 32 பேர் கவிதை வாசிக்க கவியரங்கம் களை கட்டியது. ஹைடெக் மேக்கப்பில் கமல்போல, பாரதிதான் இத்தனை கெட்அப்ல கவிதை வாசிக்கிறானோ என்கிறபடியிருந்தது. ''ஒளிமயமான எதிர்காலம் கவிதையில் தெரிகிறது'' என்று பழைய பாடல் ரீமிக்ஸாய் ஒலித்தது.

கவியரங்கப் போட்டிக்கு நடுவராக இருந்த பாடலாசிரியர் யுகபாரதி... ''கவிதை வானுலக வரம் அல்ல. ஆடு மேய்ப்பதை விடவும் எளிமையானது கவிதை எழுதுவது. பக்கம் பக்கமாக எழுத வேண்டியதில்லை. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' மாதிரி ஒரு வரி போதும் உலகப் புகழ் பெற. பொறியியலுக்கும் கவிதைக்கும் கூட சம்பந்தம் உண்டு என்பதை 'கல்கி' மூலம் நிரூபித்த காலத்துக்கு நன்றி'' என்று சாத்திரமாய் முடித்தார் 'காதல் பிசாசு' கவிஞன் யுகபாரதி.



போட்டியில் இல்லாத 'தோழமை'(!)ச் சாரல்...





''காதல் ஒன்றுமில்லை...
காதலில்லாமல்
ஒன்றுமே இல்லை.''



* 'டீன்' கஸ்தூரி - கோபிநாத் - லக்ஷ்மி நடராஜன் - SSN முதல்வர் சாலிவாகனன்

**''திரையரங்கில் மட்டுமல்ல கல்லூரி கலையரங்கிலும் கூடுவோம் என்றபடி அதிகமான எண்ணிக்கையில் அனைத்து கல்லூரி மாணவர்களின் வருகை தமிழ் வளர்ச்சியைக் காட்டுகிறது. தொடர்ந்து கல்லூரியும் கல்கியும் கைகோர்க்கும்'' என்றார் துவக்க உரை ஆற்றிய கல்கி குழுமத்தின் இணை நிர்வாக இயக்குநர் லக்ஷ்மி நடராஜன்.**

அதன்பின் வெற்றி பெற்ற மாணவர்களுக்குப் பரிசளித்துப் பேசிய 'நீயா நானா' புகழ் கோபிநாத்...

''சாதி, மத, பொருளாதார இடைவெளியை நீக்கும் ஒரே வார்த்தை ஃப்ரண்ட். ஃபிரண்ட்லோடு இருக்கிற உங்களிடம் எதைப் பற்றிப் பேச?'' என்றபோது, ஒருவர் எழுந்து, ''அட்டு பிகர் என்ற தலைப்பில் பேசுங்க'' என்றார்.

''அதுக்கு நான் எதுக்கு நீ போதுமே'' என்றதும், காற்றும் கலகலத்தது.

''நமக்குப் போட்டி பக்கத்து வீட்டுக்காரன் இல்ல - அறிமுக மில்லாத அயல்நாட்டிலிருக்கும் பெர்னாட்ஷாவோ, தாமஸோதான்.

பத்து பைசாவுக்கு இவன் பிரயோசனமில்லன்னு வீட்ல சொன்னா கவலைப்படாதே. நம்ம மதிப்பு என்னன்னு வெளிநாட்டுக்காரனுக் குத் தெரிஞ்சிருக்கு. தீர்க்கதரிசிகளை உள்ளூரில் மதிக்க மாட் டார்கள்னு பைபிள்ல சொல்லியிருக்கு. நீங்கள் தீர்க்கதரிசிகள்னு எங்களுக்குத் தெரியும்.

பெண்ணை தெய்வமா கொண்டாட வேண்டாம் - சக மனுஷியா பாருங்க அது போதும். சமூகத்தை எப்படி புரிஞ்சிக்கறது? பக்கத்தில் இருக்கிறவனைப் புரிஞ்சிக்க முடியாதபோது வேற எதுவும் சாத்தியமில்லை'' என்றார்.

''அம்மாவின் தாலாட்டை விட சுகம்'' என்று வந்தவர்களின் மேல் ஐஸ் முலாம் பூசிய ஒருங்கிணைப்பாளர் சண்முகவேலின் நன்றியுரையோடு முடிந் தது காற்றைத் தித்திப்பாக்கிய 'சாரல்' ஃபெஸ்டா!

**- அமிர்தா**



* சண்முகவேல்



**''சட்டக்கல்லூரி மாணவர்களின் மீது ஏற்பட்டிருக்கும் களங்கத்தை இப்படியான பரிசுகளால்தான் கழுவப் பார்க்கிறோம்''-**
என்றார் அதிகமான போட்டிகளில் பங்கேற்று, சுழல் கோப்பையை சட்டக் கல்லூரிக்காகப் பெற்ற மாணவர்.

# அ.தி.மு.க.வுக்கு அடிமை சாசனம்?

## - கண்ணப்பன் கேள்வி

''கட்சிப் பிடிப்புகளைத் தாண்டி மனிதாபிமானம் இருக்க வேண்டும். அந்த அடிப்படையில்தான் மருத்துவ மனையில் இருந்த கலைஞரைச் சென்று பார்த்தேன். இதற்காக என்னை ஒதுக்கத் துவங்கினார் வைகோ. எனவே, ம.தி.மு.க.விலிருந்து விலகிவிட்டேன்'' என்கிறார் கண்ணப்பன். பொள்ளாச்சி, ஆலம்பாளையம் பண்ணைவீட்டிலிருந்த அவரோடு தொலைபேசியில் பேசினோம்...

''பத்தாவது படிக்கும்போது நான் கலைஞரைச் சந்தித்தேன். தி.மு.க. மாவட்டச் செயலாளராக, அமைச்சராக, என்னை அழகு பார்த்தவர் கலைஞர். எமர்ஜென்சி காலத்தில் அவருக்குப் பணிவிடை செய்ய, பலர் தயங்கிய நிலையில், சில காலம் கலைஞருக்காக கார் ஓட்டினேன். வாணியம்பாடி ரயில் விபத்தில் மோசமாக அடிபட்டபோது, எனக்குத் தேவையான சிகிச்சைக்கு உடனே ஏற்பாடு செய்தவர் கலைஞர். கடந்த வருடம் நான் அப்பல்லோவில் இருந்தபோது ஸ்டாலின், கலைஞர் குடும்பத்தினர் என்னை நலம் விசாரித்தனர். நலம் பெற்று நான் சட்டசபைக்கு மீண்டும் வந்ததும் கலைஞர் என்னைக் கூப்பிட்டு, 'அரசியல் இருக்கட்டும்... உடம்பைப் பார்த்துக்கொள்' எனச் சொன்னது ஆறுதலாக இருந்தது. இந்த நிலையில் 85 வயதான கலைஞர் சிக்கலான அறுவைச் சிகிச்சை செய்து கொண்டு மருத்துவ மனையில் இருக்கும்போது சென்று பார்த்தது தவறா?'' என்று தழுதழுத்த குரலில் கேட்டார் கண்ணப்பன்.

''சட்டசபை நிகழ்ச்சிகளில், அ.தி.மு.க.வைப் பின்பற்றி சகட்டு மேனிக்கு ம.தி.மு.க. நடந்து கொள்ளும் முறையில் ஆகட்டும், திருமங்கலம் தொகுதியை அ.தி.மு.க.வுக்கு விட்டுக் கொடுத்தது ஆகட்டும், மாபெரும் தவறுகள். இதை நான் எடுத்துச் சொன்னதும் என்னை ஒதுக்கத் துவங்கினார் வைகோ. அ.தி.மு.க.வோடு தோழமை சரி... அதற்காக அடிமை சாசனம் ஏன்?''

**ம.தி.மு.க.வின் எதிர்காலம்?**

''கட்சி துவங்கியபோது தி.மு.க.விலிருந்து ஒன்பது மாவட்டச் செயலாளர்கள் வைகோ பின் வந்தனர். இப்போது இரண்டு பேர் மட்டுமே கட்சியில் இருக்கின்றனர். இதன் மூலமே வைகோ கட்சியை எப்படி நடத்தினார் என்பது தெரியவில்லையா? தி.மு.க.வை விட்டு விலகி வரும்போது வைகோ சொன்னது, 'மகனுக்காக சதி செய்து என்னை வெளியேற்றிவிட்டார் கலைஞர்' என்பதுதான். ஆனால் இன்று ம.தி.மு.க.விலும் குடும்ப ஆதிக்கமே'' என்று குமுறுகிறார் கண்ணப்பன்.

- கௌசி




# கல்கி





2009 மார்ச் 22
ஸர்வதாரி பங்குனி 9
மலர் : 67
இதழ் : 34


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

# தேர்தல் கள சுத்திகரிப்பு!

குறையாமல் மிகுந்துகொண்டே வருகிறது தேர்தலுக்கான செலவு. பணவீக்கமும் விலைவாசி உயர்வும் மட்டுமே இதற்குக் காரணம் அல்ல; தேர்தலுக்கான பாதுகாப்பும் கண்காணிப்பும் ஒவ்வொரு முறையும் கூடுதலாகி வருவதும் இதற்குக் காரணம்! வரும் ஏப்ரல் - மே மாதங்களில் நடக்கும் தேர்தல்களுக்கு மட்டும் பத்தாயிரம் கோடி ரூபாய் செலவாகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது! இதில் இருபது சதவிகிதம் மட்டுமே எலக்ஷன் கமிஷனும் ஆட்சிகளும் செய்யக்கூடிய அதிகாரபூர்வமான செலவு. மீதித் தொகை, அரசியல் கட்சிகளின் அபரிமித செலவாகவே அமையும் என்கிறது ஓர் ஆய்வு! ஆகவே, கறுப்புப் பணப்புழக்கம் பெருகி, விலைவாசி மேலும் ஏறும் என்று நிச்சயமாக எதிர்பார்க்கலாம்! இவ்வாறு விரயமாகும் தொகை மட்டும் உற்பத்திப் பணிகளில் முதலீடானால் கிடைக்கக்கூடிய வருவாயும் வேலைவாய்ப்புகளும் இந்தியாவின் பொருளாதாரப் பிரச்னைகளைக் கணிசமாகக் குறைத்துவிடுமே!

புதிய ஆட்சி அமைகிறபோதாவது விடியல் பிறக்கும் என்றோ, பொருளாதாரம் மேம்படும் என்றோ, வேலை வாய்ப்பு பெருகும் என்றோ நம்புவதற்கு இடமின்றி அமைந்திருக்கிறது தேர்தல் களம்!

தற்போதைய மக்களவை உறுப்பினர்களுள் 128 பேர் மீது, பல்வேறு குற்றங்களுக்கான வழக்குகள் பதிவாகி நிலுவையில் உள்ளன! இது மொத்த லோக் சபா எம்.பி.க்கள் எண்ணிக்கையில் இருபத்து நான்கு சதவிகிதம்! தமிழ்நாட்டு எம்.பி.க்கள் எட்டு பேர் மீது வழக்குகள்

ஹைய்யா! புலியைப் பூனையாக்கியாச்சு!

மியாவ்




நிலுவையில் உள்ளன! இப்படிப்பட்ட குற்றப்பின்னணி உள்ள உறுப்பினர்கள் நாட்டுக்கு நல்லது செய்வார்கள் என்று எவ்வாறு எதிர்பார்ப்பது! அவர்களுக்குத் தங்களையும் தங்கள் பதவியையும் காப்பாற்றிக் கொள்வதற்காகப் போராடவே நேரம் சரியாக இருக்கும்! மேலும், உண்மையிலேயே தேசநலன் கருதும் உறுப்பினர்கள் ஏதேனும் நன்மை செய்ய முயன்றாலும் கூட, அவர்களுடைய முயற்சிகளுக்கு, கிரிமினல் பேர்வழிகள் பக்கமிருந்து முட்டுக்கட்டை விழும்; தடை ஏற்படும்!

நாடாளுமன்றம் என்பது மக்கள் பிரதிநிதிகள் கூடி விவாதித்து, தேசத்துக்காக நல்ல முடிவுகளை எடுக்கும் இடம். அதிலே சுயநலமிகளுக்கும் குற்றத்தின் கறையோ நிழலோ கூட படிந்தவர்களுக்கும் இடமே அளிக்கப்படக்கூடாது. வேட்பாளர் மீதுள்ள வழக்கு நிலுவையில்தானே இருக்கிறது, குற்றவாளி என்று நிரூபிக்கப்படுகிற வரையில் ஒருவர் நிரபராதிதானே என்று வாதாடுவது நாடாளுமன்ற பொறுப்புக்குப் பொருந்தாது. அது பொதுப்பணி என்பதோடு மக்களின் வரிப்பணத்தைக் கையாளும் பணி; அதனை ஊதியமாகப் பெறும் புனிதப் பணி.

இப்பணிக்குப் போட்டியிட, குற்றப் பின்னணியோ வழக்கோ உள்ளவர்களுக்குத் தடைவிதிப்பதுதான் முறை. அதற்கேற்ப தேர்தல் சட்டங்களை உடனே திருத்த வேண்டும். ஆனால், தேர்தல் சீர்திருத்தங்களை நிறைவேற்றவும் நாடாளுமன்றம்தான் வாக்களிக்க வேண்டும் என்பதால், பிரச்னை தீராமலேயே இருந்து வருகிறது.

மக்களின் விழிப்புணர்வு மட்டுமே தேர்தல் கள சுத்திகரிப்புக்கு உதவ முடியும். வழக்கு நிலுவையில் உள்ள வேட்பாளர்களை ஏற்கவும் ஆதரிக்கவும் அவர்கள் வன்மையாக மறுக்க வேண்டும். அவ்வாறு மறுப்பதன் முக்கியத்துவத்தை மீடியாவும் பல்வேறு சமூகநல அமைப்புகளும் எடுத்துச் சொல்லி, யார் யார் பேரில் குற்றச்சாட்டு உள்ளது என்பதை மக்களுக்கு உணர்த்தி, செய்தி பரவ உதவ வேண்டும். இவ்வாறு செய்ய ஆரம்பித்தால், வேறு வழியின்றி, நேர்மையான வேட்பாளர்களை நிறுத்தும் கட்டாயம், அரசியல் கட்சிகளுக்கு ஏற்படும். ○

இன்றைய இளம்பெண்களை அதிகமாக ஆட்டுவிக்கும் சொல் 'சைஸ் ஜீரோ'! ஒல்லிக்குச்சியாக கிள்ளியெடுக்க சதையே இல்லாமல் இருப்பதுதான் தற்போதைய ஃபேஷன்.

சைஸ் ஜீரோவைப் பாப்புலராக்கியது பாலிவுட்டில் கரீனா கபூர்! ''என்னை யூத் ஐகான் என்று சொல்கிறார்கள். பலருக்கு நான் ரோல் மாடலாக இருப்பது பெருமைதான். எனக்கும் சில பொறுப்புகள் உண்டு. நான் பட்டினியாகக் கிடப்பதோ, அனாரக்ஸிக்கோ கிடையாது. பவர் யோகா பண்ணுகிறேன். காலையில் தினமும் அறுபது சூர்ய நமஸ்காரம் செய்கிறேன். ப்யூர் வெஜிடேரியனாக மாறிவிட்டேன். லிட்டர் லிட்டராகத் தண்ணீர் குடிக்கிறேன். ஹெல்தி லைஃப் ஸ்டைலுக்கு மாறினால் சைஸ் ஜீரோ ஃபிகர் கிடைக்கும்'' என்கிறார் கரீனா.

சைஸ் ஜீரோ என்பது வெளிநாட்டில் மாடல்கள், நடிகைகளைப் பிடித்து ஆட்டும் நோய். எலும்பும் தோலுமாக, மாதக் கணக்காக ஒன்றுமே சாப்பிடாமல், வெறும் காபி + சிகரெட்டில் உயிர் வாழும் பெண்கள்! அமெரிக்காவில் சைஸ் ஜீரோ ஆடை என்பது யு.கே.யின் சைஸ் 4 அளவு. இதில் இடுப்பளவு வெறும் 23 இன்ச் மட்டுமே... அதாவது சுமார் எட்டு வயது சிறுமிக்கு இருக்க வேண்டிய இடுப்பளவு மட்டுமே இருக்க வேண்டும். இந்த அளவுக்காக பெண்கள் தியாகம் செய்வது உணவு, உறக்கம் மற்றும் பல...

நாளடைவில் பெண்களுக்கு மாதவிடாய், உலர்ந்த சருமம், தலைமுடி கொட்டுதல் மற்றும் எலும்புகள் சருகாகிப் போவது போன்ற பல பிரச்னைகள் வரும் என வல்லுநர்கள் கவலை தெரிவிக்கிறார்கள். ஆனாலும், மாடல் உலகில் ராம்ப் வாக் மற்றும் கேட் வாக்குக்கு ஒல்லியான பெண்களுக்கே முதலிடம். (குஷ்பூக்களும், நமீதாக்களும் சைஸ் ஜீரோவின் எதிரிகள்!)

அழகிப் போட்டியில் ஜெயிக்க வேண்டும் என விருப்பமுள்ள பெண்கள், கடுமையான டயட்டில் இருக்க வேண்டுமாம். எண்ணெயே இல்லாத, லோ ஃபேட் (low fat) உணவுகள், சாலட், வேகவிட்ட காய்கறிகள்... இதுதான் சாப்பிட வேண்டும். ஸ்விம்சூட் ரவுண்டில் கலக்கலாக இருக்க வேண்டுமானால், கொலைப் பட்டினி கிடக்க வேண்டுமாம். பல மாடல்களுக்கு புகை பிடிக்கும் பழக்கம் தொற்றிக் கொள்வது ஏனென்றால், பசியை கொன்றுவிடுமாம் சிகரெட்! ''மாடல்கள் ஹாங்கரைப் போல. டிஸைனர்கள் வடிவமைக்கும் ஆடைகளைப் போட்டு ஸ்டைலாக கேட் வாக் செய்ய நல்ல ஃபிகருள்ள மாடல்கள் தேவை. ஸ்லிம்மாக இருப்பது அவர்கள் கடமை. ஜாப் ரெக்யுர்மென்ட். ஒரு பிராண்டை வெற்றிகரமாக்க அவர்களுடைய ப்யூட்டி தேவைப்படுகிறது'' என்கிறார் ஒரு ஃபேஷன் டிஸைனர்.

ஒரு சில வருடங்களுக்கு முன்னால் உருகுவே நாட்டில் நடந்த ஃபேஷன் வீக்

**உணவு, உறக்கம், உடற்பயிற்சி... இதைச் சரியாக, சரியான நேரத்தில் தவறாமல் செய்தாலே ஹெல்தி ஃபிகர் கிட்டும்.**

# ஒல்லிக்குச்சி

கொண்டாட்டத்தில் கேட் வாக்கின் போது பரிதாபமாக உயிரிழந்தார் 22 வயதே ஆன ராமோஸ். கடுமையான டயட்டில் இருந்திருக்கிறார் இந்தப் பெண். BMI (பாடி மாஸ் இன்டெக்ஸ்) இவருக்கு 18க்கும் கீழே இருந்ததாம். சைஸ் ஜீரோவானால்தான் நீ பெரிய மாடலாக வருவாய் என மாடல் ஏஜென்ஸிகள் இவரை மரணக் குழிக்குள் தள்ளிவிட்டிருக்கின்றன. வெறும் இலை தழைகளை மட்டுமே சாப்பிட்டாராம் ராமோஸ்.

இதற்குப் பிறகு மியான், மாட்ரிட், லண்டன் போன்ற இடங்களில் நடந்த ஃபேஷன் விழாக்களில், படுஒல்லியான எலும்பும் தோலுமான மாடல்கள், பி.எம்.ஐ. 18க்கும் கீழே உள்ள பெண்கள், கேட் வாக்குக்குக் கிடையாது என அறிவிக்கப்பட்டது.

சைஸ் ஜீரோ என்பது நம் தமிழ்நாட்டைப் பொறுத்தவரை அவ்வளவாக தாக்கவில்லை என்றே சொல்லலாம். 'தளதளவென்று கும்முன்னு இருக்கும் ஹீரோயின்களே எங்கள் சாய்ஸ்' என்பது சினி ஃபீல்ட் + பொது மக்களின் அன்பான வேண்டுகோள்.

உணவு, உறக்கம், உடற்பயிற்சி... இதைச் சரியாக, சரியான நேரத்தில் தவறாமல் செய்தாலே ஹெல்தி ஃபிகர் கிட்டும். சைஸ் ஜீரோ ஃபிகர் என்பது ஒரு மாயை. இதனால் ஒரு பெண் தொலைப்பது நிம்மதி, சந்தோஷம் மற்றும் ஆரோக்கியத்தை!

- லதா சேகர்

# உடம்புக்காரி!

உடையழகு... நடையழகு...

பொருளாதார அடியாள். ஜான் பெர்கின்ஸ், இப்படித்தான் அழைக்கப்படு கிறார். அமெரிக்காவில் உள்ள மெய்ன் என்னும் நிறுவனம், இவரை வேலைக்கு அழைக்கிறது. உங்களுடைய கடந்த காலம் பற்றிச் சொல்லுங்கள்? இந்த உலகைப் பணத்தால் கட்டுப்படுத்தி ஆளவேண்டும் என்னும் விருப்பம் உங்களுக்கு உண்டா? அசாதாரணமான சூழலைச் சந்திக்கத் தயாரா?

ஜான் பெர்கின்ஸ் தயாராகவே இருந்தார். அவருக்குத் தேவை அள்ள அள்ளக் குறை யாத பெருஞ்செல்வம். மெய்ன் அழைக் கிறது. இணைந்து விடுகிறார் ஜான். பணி களை விவரிக்கிறார்கள். ''ஒரு நாட்டை உங்களிடம் ஒப்படைப்போம். நீங்கள் அங்கே பல தரப்பட்ட மக்களைச் சந்திக்க வேண்டும். அந்நாட்டின் அரசியல், சமூக, பொருளாதார நிலைமை குறித்து விவரமாக ஆராயவேண்டும். கவனம், புள்ளிவிவரங்கள். அவர்கள் வளர்ச் சிக்கு என்னென்ன தேவை என்று பார்க்க வேண்டும்.''

''திட்டத்தை நிறைவேற்றுவதற்கு யார் பணம் தருவார்கள்?'' ஜான்பெர்கின்ஸ் திருப்பிக் கேட்டார். மெய்ன் அதிகாரிகள் விளக்கினார்கள். ''என்னென்ன திட்டம் அவர்களுக்குத் தேவைப்படும் என்பது பற்றி விவரங்களை நாங்களே உங்களுக்கு அளித்துவிடுவோம். திட்டத்துக்கான செலவை, ஐ.எம்.எஃப்., உலக வங்கி உள்ளிட்ட சர்வதேச அமைப்புகள் கடனாக அளித்துவிடும். குறிப்பிட்ட திட்டத்தால் பலன் நிச்சயம் உண்டு என்பதை அவர்களை ஏற்றுக்கொள்ளச் செய்வதுதான் உன் வேலை. புரிகிறதா?''



**“ஜான் பெர்கின்ஸ், தான் செய்வது கடைந்தெடுத்த அயோக்கியத்தனம் என்பதை உணர்ந்தார்!”**

நிறைய கேள்விகள் அவரைத் துரத்த ஆரம்பிக்கின்றன. நினைத்துப் பார்க்க முடியாதபடி பிரம்மாண்டமான சம்பளத் தைத் தருகிறார்கள். உன் விருப்பத்துக்குச் செலவு செய், நாங்கள் பார்த்துக்கொள் கிறோம் என்கிறார்கள். எதற்காக இத்தனை வசதிகள், சலுகைகள்? எதற்காக ரகசியம்? ஓர் ஏழை நாட்டுக்கு உதவுவதற்காகவா? அவர்களுக்குக் கடன் பெற்றுத் தருவதற்

▪ மருதன் ▪




# அடியாளின் வாக்குமூலம்!

காகவா? அவர்களுக்கு வசதிகள் பெருக வேண்டும் என்பதற்காகவா? அதைப் பட்ட வர்த்தனமாகவே செய்துவிடலாமே? உலக வங்கி நேரடியாகவே சம்பந்தப்பட்ட தேசத்துடன் தொடர்பு கொண்டு, 'இந்தா செக்' என்று எழுதிக் கையில் கொடுத்துவிடலாமே. நான் எதற்குத் தேவைப்படுகிறேன்?

விடை தெரிய ஆரம்பித்தபோது மாபெரும் வலைப்பின்னல் ஒன்றில் சிக்கிக் கொண்டதை உணர்ந்தார் ஜான். மற்றவர்களுடன் பகிர்ந்துகொள்ள ஒரு புத்தகத்தையும் எழுதினார். Confessions of an Economic Hit man. **'ஒரு பொருளாதார அடியாளின் ஒப்புதல் வாக்குமூலம்'**. இரா. முருகவேள் தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார்.

ஜான்பெர்கின்ஸ் பறந்து சென்ற நாடுகள் ஏராளம்; நிகழ்த்திய ஆய்வுகள் கணக்கற்றவை; பல்வேறு தலைவர்களுடன் உரையாடியிருக்கிறார். முக்கிய இதழ்கள் பலவற்றில் இவரது பொருளாதார ஆய்வு அறிக்கைகள் வெளிவந்துள்ளன.

ஆனாலும், 'நான் செய்தது அயோக்கியத்தனம்தான்' என்கிறார் ஜான்பெர்கின்ஸ். உதாரணத்துக்கு மின்சாரத் திட்டம். இத்திட்டத்தால் உங்கள் நாட்டுக்கு இன்னின்ன நன்மைகள் விளையும் என்று கற்பனையாக ஒரு புள்ளி விவரத்தைத் தயார் செய்வார். அதை அந்நாட்டு அதிபரிடம் சமர்ப்பித்து ஒப்புதலும் வாங்கிக் கொள்வார். பின், மெய்ன் நிறுவனம் உலக வங்கியைத் தொடர்புகொள்ளும். குறிப்பிட்ட நாட்டுக்குக் கடன் பட்டுவாடா செய்யப்படும். மின்சாரத் திட்டத்தைச் செயல்படுத்துவதற்கான பணியை, அமெரிக்க நிறுவனங்களுக்கு ஜான் வாங்கிக் கொடுத்துவிடுவார்.

இதன் மூலம் அமெரிக்கா அடையும் லாபங்கள் இரண்டு. ஒரு தேசத்தை நிரந்தரக் கடனாளியாக்கவும், எப்போதும் தன்னைச் சார்ந்திருக்கும் ஒரு தேசமாகவும் மாற்ற முடியும். மற்றொரு பக்கம், தமது நிறுவனங்களை அந்நாட்டுக்கு அனுப்பிவைப்பதன் மூலம், உலக வங்கி அளித்த கடன் தொகை முழுவதையும் அமெரிக்காவே திரும்பப் பெற்றுக் கொள்ளலாம். அதாவது, கொடுத்த கடன் மறைமுகமாகத் திரும்பி வந்துவிடும். அதேசமயம், அந்நாடு கடனாளியாகவும் இருக்கும். இந்த ஏமாற்று நாடகத்தை, தமது வாக்குமூலத்தில் விலாவாரியாகப் பதிவு செய்திருக்கிறார் ஜான்பெர்கின்ஸ். ●

* சிரஞ்சீவி

முதல் தேர்தல் என்பதால் படுடென்ஷனாக இருக்கிறார் சிரஞ்சீவி. தொண்டர்களை உற்சாகப்படுத்தி, தேர்தல் பணிகளில் ஈடுபடுத்த, மாநிலம் முழுவதும் தொண்டர் கூட்டங்கள் நடத்துவதில் முழுமூச்சாக ஈடுபடுவது ஒரு பக்கம் என்றால், இன்னொரு பக்கம் வேட்பாளர் தேர்வு, தேர்தல் வியூகம் வகுப்பது என்று படுபிஸி. சிரஞ்சீவியின் தம்பியும், யுவராஜ்யம் தலைவருமான நடிகர் பவன்கல்யாண்தான் பிரஜா ராஜ்யம் கட்சியின் நெம்பர் டூ. யுவராஜ்யம் உறுப்பினர்கள் ஆந்திரா முழுவதுமாக 29 லட்சம் புதிய வாக்காளர்களைச் சேர்த்திருக்கிறார்கள். தெலுங்கானா வாக்காளர்களைக் கவர, ஆட்சிக்கு வந்தால் சட்டசபையின் முதல் கூட்டத் தொடரிலேயே தெலுங்கானா உருவாக வழிசெய்யும் தீர்மானம் கொண்டு வரப்படும் என அறிவித்திருக்கிறார் சிரஞ்சீவி.

# "சிரஞ்சீவிகாரு, ஒக வோட்டிக்கி எந்த டப்பு?"

*(ஒரு தபா எங்க ஊரு அஞ்சா நெஞ்சரைச் சந்திச்சு, தேர்தல்ல ஜெயிக்கிற டெக்னிக்குகளைத் தெரிஞ்சுக்கிட்டுப் போகலாமே!)*

ஆந்திர சட்டசபையின் கடைசி கூட்டத் தொடரில் ஏகப்பட்ட அமளி


* சந்திரபாபு நாயுடு

துமளி! முதலமைச்சர் ராஜசேகர ரெட்டியின் மகன் ஜகன்மோகன் ரெட்டி சம்பந்தப்பட்ட பதினான்கு நிறுவனங்களில் நடந்த நிதி மோசடிகளைப் பற்றி எதிர்க்கட்சி எம்.எல்.ஏ.க்கள் சர்ச்சை எழுப்ப, சபாநாயகர் தம் அஸ்திரத்தைப் பயன்படுத்தி விட்டார். ஐம்பத்தைந்து எதிர்க்கட்சி எம்.எல்.ஏ.க்கள் கூண்டோடு வெளியேற்றப்பட்டனர். இதனால் மாநிலம் முழுக்கப் பரபரப்பு. ''சட்டசபை நிகழ்ச்சிகளை நேரடி ஒளிபரப்பு செய்வதால்தான் இவ்வளவு பிரச்னை. அதை நிறுத்த என்ன வழி?'' என்று ஆவேசமாகி, சி.எம். ரெட்டிகாரு கோபமாகக் கேட்க, பிரச்னை இன்னும் பெரிதாகிவிட்டது.

***(எதுக்கு வீண் வம்புன்னு எதிர்க்கட்சி எம்.எல்.ஏ.க்களைப் போல மீடியாக்காரர்களையும் கூண்டோடு வெளியேத்திடாதீங்கய்யா!)***

**ச**ட்டசபைத் தேர்தலும், பாராளுமன்றத் தேர்தலும் ஒன்றாக நடக்கப் போவதால், ஆந்திரா முழுவதுமே தேர்தல் திருவிழா களைகட்ட ஆரம்பித்து விட்டது என்றாலும், மாநிலம் முழுவதிலுமுள்ள அனைத்துக் கட்சிப் பிரமுகர்களும் தேர்தல் சீட் வாங்குவதில் மும்முரமாகக் களமிறங்கி இருக்கிறார்கள். ஹைதராபாத்தின் முக்கிய ஹோட்டல்கள் எதிலுமே ரூம்கள் கிடைப்பது குதிரைக் கொம்பாக இருக்கிறது. பொருளாதாரத் தேக்கம் நிலவும் இந்த நேரத்தில் தேர்தல் வந்திருப்பதை, பண முதலைகள் வரப்பிரசாதமாகக் கருதுகிறார்களாம். காரணம்? கறுப்பை வெளியில் எடுத்து விடலாமல்லவா?

***(ஏமண்டி! ஒரு வோட்டுக்கு ஏமி ரேட்டு?)***

**தே**ர்தலில் பரபரப்பூட்ட ஒரு சி.டி. வெளியிடப் போகிறது தெலுங்கு தேசம் கட்சி. ஆளுங்கட்சியை விமர்சிக்கும் சி.டி.யா? இல்லை! மர்டர் மிஸ்டிரி சி.டி.! தெ.தே. கட்சியின் முக்கியத் தலைவர்களுள் ஒருவரான பரிதாலா ரவி படுகொலை பற்றிய சி.டி.! படுகொலை பற்றி இதுவரை வெளியாகாத தகவல்கள் மற்றும் காட்சிகளைக் கொண்டு உருவாக்கப்பட்ட சி.டி.யின் கிளைமாக்ஸில், படுகொலையான தலைவரது மனைவி பரிதாலா சுனிதா, முதலமைச்சரைக் குற்றம்சாட்டும் உருக்கமான பேச்சு இடம்பெற்றுள்ளது!


* ராஜசேகர ரெட்டி

***(ஆளுக்கு ஒரு சி.டி. இலவசமா கொடுப்பீங்களா?)***

**- பரத்ராம்**

நச்சுன்னு நக



## www.andhimazhai.com

நாளிதழ், வார இதழ், மாத இதழ் என்று இதழியலின் முத்தரப்பையும் வாசிக்கும் உணர்வை வழங்குகிறது இத்தளம்.

செய்திகளை உடனுக்குடன் தருவதுடன் அந்தந்த வாரத்தின் சூடான மற்றும் குளுமையான செய்திகளையும், சுவாரஸ்யமான மொழிநடையில் விருந்து படைக்கிறார்கள்.

சமையல் குறிப்புகள், மருத்துவம் என்று சகல வாசகர்களுக்கும் சங்கதி சொல்லும் இத்தளத்தின் மிக முக்கியமான மற்றொரு அம்சம், இலக்கியவாதிகளின் பங்கேற்பும் பங்களிப்பும்.

சமீபத்தில் மறைந்துபோன தமிழின் குறிப்பிடத்தக்க பெண்கவிஞர் சுகந்தி சுப்பிரமணியன் பற்றி, கவிஞர் கலாப்ரியா எழுதியிருக்கும் அஞ்சலிக் குறிப்பு முக்கியமானது.

இணையத்திலும்கூட தீவிரமாகவும் நுட்பமாகவும் எழுதி வெற்றிபெற முடியும் என்பதற்குச் சிறந்த உதாரணம், சுகுமாரனின் வேழாம்பல் குறிப்புகள்.

சினிமா ரசிகர்களுக்கும் இத்தளம் 'ஒன்றுமில்லை' என்று கைவிரிக்கவில்லை. அபிமான தாரகைகளின் ஒளிப்பட ஓவியங்கள் அணிவகுத்து நிற்கின்றன.

எல்லாத் தரப்பினரையும் நிறைவுபடுத்துவதென்பது சவாலான காரியம்தான். அதைச் சமாளிக்கவும் செய்கிறார்கள்.

## www.tamilblogs.com

புற்றீசல்போல பொல பொலவென தினம் தினம் பலநூறு வலைப்பூக்கள் மலர்ந்த வண்ணமிருக்கின்றன. அதற்காக ஒவ்வொன்றையும் தனியாகத் தேடி அலைய முடியுமா என்ன?

வலைப்பூக்களின் வாசம் நுகராமல் எனக்குத் தூக்கம் வராது என்று அடம் பிடிப்பவர்களுக்கு இத்தளம் உதவியாக இருக்கும்.

இன்னும் thenkoodu.com, tamilveli.com, thamizhbharathi.com ஆகிய தளங்களும் வலைப் பூக்களைத் தொகுத்து வழங்குகின்றன.

அரசியல், சினிமா குறித்த மிகவும் மேலோட்டமான

வலையோடு விளையாடு

# பராமரிப்பு!

## www.beauty-iloveindia.com



இயற்கையே பெண்ணை அழகாய்ப் படைத்திருந்தாலும், அழகுக்கு அழகு சேர்த்துக் கொள்வதுதானே இயல்பு.

வெட்டியெறியப்போகும் நகத் துண்டிலும் கூட கொட்டிக்கிடக்கிறது கோடியழகு.

நகங்களுக்கேற்ற நிறம் இளஞ் சிவப்பு. அடிக்கடி இதழ்களின் நிறம் மாறும் அதிசய மலர்கள் (அட... உங்க கைதாங்க...) எனில், வாரம் ஒரு நாள் அல்லது இரு நாள், நகங்களைச் சுதந்திரமாய் சுவாசிக்க விடுவது நலம். தேங்காய் எண்ணெயைத் தடவி விரல் நகங்களை நீவி விடுவது நல்லதொரு நகப்பராமரிப்பு முறை.

நகங்களுக்கு வெளியே நிறம் தீட்டுவது எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் நகங்களுக்கு உள்ளேயும் தூய்மை பேணு தல், எலுமிச்சைச் சாறு கலந்த சுடுநீரில் நகங்களை நீராட்டுவது இதற்கான எளிய வழி.

நகங்களுக்கே இவ்வளவு சிரத்தை யெனில் இன்னபிற அவயங்களுக்கு எவ் வளவு கவனம் தேவை?

இத்தளம் பாதாதிகேசம் முழுவதற்கும் பயனுள்ள அழகுக்குறிப்புகளை அள்ளி வழங்குகிறது.

கட்டுரைகள்தான் வலைப்பூக் களாய் உலா வந்தாலும், ஒவ்வொ வரும் தம் கருத்துக்களைப் பகிர்ந்து கொள்ளவும், விவாதிக்கவும் அருமை யானதொரு வெளிதான் இது.

தொழில்நுட்பத்தை சாதக மாக்கிக் கொள்வதும், வெட்டியாய் பொழுதுபோக்கும் சாதனமாக மாற்றிக் கொள்வதும் நம் கைகளில்தான் இருக்கிறது.



- ஸாந்த்




# அடையாளம்

**உஷாதீபன்**

அந்த நாற்காலியையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தான் ரமணன். அதை அந்த இடத்தில் போட்டதும் தான் மனத்துக்கு ஒரு திருப்தி வந்தது. இத்தனை நாள் இது தெரியாமல் போயிற்றே இந்த மர மண்டைக்கு என்று இருந்தது.

இரண்டு கைப்பிடியிலும் கைகளைப் படுக்க வைத்த மேனிக்கு அமர்ந்து, அப்பா பேப்பர் படித்துக்கொண்டிருக்கும் காட்சி. சில வருடங்களுக்கு முன் குடியிருந்த பழைய வாடகை வீட்டில் அப்பா அங்கு தான், அதில்தான் அமர்ந்திருப்பார்.

''இதென்ன வாயில் காப்போன் மாதிரி... வழியில நாற்காலியைப் போட்டுண்டு... ஓரமா உட்காரக் கூடாதா?''

''நான் இப்படி உட்கார்ந்தா அது உனக்குக் கஷ்டமாப் போயிடுதா... வேணும்னா இப்படிப் போட்டுக்கிறேன்...'' சட்டென்று எழ முனைவார்.

''ஏம்மா இப்படிச் சொல்றே...? எங்களுக்கு ஒண்ணும் இடைஞ்சல் இல்லே... அப்பா பாட்டுக்கு உட்கார்ந்துட்டுப் போகட்டும். நீங்க உட்காருங்கப்பா...'' மூத்த தங்கை கோமளி, எழுந்த அப்பாவை அமர்த்துவாள்.

''பெண்கள் சிபாரிசு அதிகமாயிடுத்தாக்கும்... சிரிச்சிக்கிறேன்...''

''போச்சு, நா சிரிக்கறது கூட உனக்குப் பிடிக்காமப் போயிடுத்தாக்கும்.. வேணும்னா அதையும் குறைச்சுக்கிறேன்...''

''சிரிங்கோளேன்... நன்னாச் சிரிங்கோ... யார் வேண்டாம்னது...''

அப்பா அதற்கும் சிரித்துக்கொள்வார். அவர்கள் இருவருக்குமிடையிலான சம்பாஷணை ஆதர்ச தம்பதிகளுக்கான தனித்துவம். அதை யாரும் அணைபோட்டுத் தடுத்துவிட முடியாது.

பத்துப் பதினைந்து வருடங்களுக்குள் தான் எத்தனை மாற்றங்கள்? எதிரே தரையில் அமர்ந்து தினசரி படித்துக் கொண்டிருந்த ரமணன் அந்த நாற்காலியையே பார்த்தான். அப்பா இருந்திருந்தால் இந்நேரம் அதில் தான் அமர்ந்து பேப்பர் படித்துக் கொண்டிருப்பார்.

யதாஸ்தானம் கரிஷ்யே... என்று சொல்லிக் கொண்டுதான் அமர்வார் அங்கே. பேப்பர் வாசனை மூக்கில் ஏற ஏறச் செய்தி படிக்க வேண்டும் அப்பாவுக்கு. 'நம்பளைச் சுத்தி என்ன நடக்கிறதுங்கிறது தெரியாத மனுஷன் என்ன மனுஷன்?' என்பார்.

'மனுஷாளுக்கு நடுவே இவ்வளவு துவேஷம் எப்படி வளர்ந்ததுன்னே தெரியலே... தேசம் போற போக்கைப் பார்க்கிறபோது மனசு பதர்றது. இந்த நாட்டு மேலே உண்மையான பற்று



வச்சிருக்கிறவன் கவலைப்படாம இருக்க முடியாது...' முகத்தில் தாங்கவொண்ணாத சோகத்தோடு சொல்வார் அப்பா.

எதிரே சந்தனம், விபூதி, மணக்க மணக்க அப்பா அமர்ந்திருப்பது போல் தோன்றியது இவனுக்கு. அப்படிச் சாவகாசமாய் அப்பா அமர்ந்திருந்தது கொஞ்ச நாள்தான். பாவி மனுஷன்... அனுபவிக்கக் கொடுத்து வைக்காதவர்... வாழ்க்கை பூராவும் உழைக்கத்தான் யோகம் அவருக்கு.

கேட்டரிங் படித்துக் கொண்டிருந்தவர்தான் அப்பா. அவர் அந்த இடத்தை அடைவதற்கு முன்பான கடுமையான அனுபவங்களை, சோகங்களை இங்கே பகிர்ந்துகொண்டு தான் ஆக வேண்டும். ஒழுங்காகப் படிக்க வைத்திருந்தால் நன்கு படித்து நல்ல உத்தி யோகத்தை எட்டக்கூடிய



திறமை படைத்தவர்தான். இதை மறுப்பதற்கில்லை. இந்த எட்டாம் கிளாஸ் படித்திருந்த நாட்களிலும் அப்பா ஹிந்து பத்திரிகையை வரி விடாமல் படிக்கும் திறன் படைத்தவராய் இருந்தார். எட்டாம் வகுப்போடு நிறுத்திவிட்டு, வேலைக்கு அனுப்பியாயிற்று. அந்தக் காலத்தில் ஜவுளிக்கடை

நடந்து கொண்டிருந்தது. எப்படி இந்த வியாபாரத்துக்குள் புகுந்தார்கள் என்பது இன்றுவரை புரியாத கதை. அப்பா அங்கே துணி கிழிக்கப் போய்விட்டார். அப்படியே வேலை பழகட்டும். பையன் பெரிய வியாபாரியாகட்டும் என்பது தாத்தாவின் கனவாய் இருந்திருக்க வேண்டும்.

சில வருடங்கள் அப்படி ஓடியிருக்கின்றன. ஜவுளி வியாபாரம் படுத்துப் போக, ஹோட்டல் கைகொடுத்திருக்கிறது. அதிலும் எங்கும் போய் அடிமைப்பட்டு வேலை செய்ய மனம் ஒப்பாமல், வியாபார புத்தி ஒட்டிக் கொண்டிருக்கிறது. கடை திறந்தேன், கொள்வார் இல்லை என்பதைப் போல. திறந்த கொஞ்ச நாளைக்கு ஓஹோ என்றுதான் நடக்கும். வியாபாரம் பிய்த்துக் கொண்டுதான் போகும். சரி, ஒருவழியாகக் கால் ஊன்றியாயிற்று என்று நினைக்கும் போது மாற்றம் ஏற்பட்டுவிடும்.

'சாமி, என்னாச்சு ஒரு வாரமா கடையே திறக்கல...?' என்று விசாரித்துக் கொண்டு வந்து நிற்பார்கள் சிலர். அவர்களெல்லாம் வழக்கமாய் அப்பா கடையில் போஜனம் கொள்பவர்கள்.

'வரவுக்கும் செலவுக்கும் இப்படி ஒதைச்சதுன்னா எப்படி நீட்டிண்டே போறது...' சில மனக் கணக்குகள் உண்டு அப்பாவிடம். அவை பிசகும்போது சட்டென்று புரிந்து நிதானப்பட்டு விடுவார். அதுதான் அவரைக் காப்பாற்றியிருக்கிறது. கொஞ்ச நாள் பேசாமல் இருப்பார். எங்கேயாவது கடனை உடனை வாங்கிக் கொண்டு திரும்பவும் கடை வைக்கக் கிளம்பி விடுவார். கடுமையான அனுபவத்துக்குப் பிறகுதான் அப்பா ஃபீல்டையே மாற்றினார். அதுதான் கேட்டரிங். சமையல் கலை. நளபாகம்!

முதலில் சாதாரணமாகத்தான் ஆரம்பித்தார். அவர் கடை வைத்த காலத்தில் அவரோடு கிடந்து லோல்பட்டவர்கள் எல்லோரையும் இழுத்துக் கொண்டுதான் அலைந்தார். அந்தந்த வீட்டுச் சின்னச் சின்ன விசேடங்களில் அப்பாவின் கைபாகத்தைப் பார்த்துவிட்டு, அவர்கள் சொல்லிச் சொல்லி அப்படியே அழைக்க ஆரம்பித்தார்கள். அப்படியே வளர்ந்ததுதான். நாளடைவில் ஒரு கோஷ்டியே பெருகிவிட்டது. கல்யாணம், சீமந்தம், வளை

''புகழ் மணக்க; இல்லறம் மணக்க; ஊர் மணக்கன்னு வாழ்த்துறாரே, யாரு அவரு?''
''ஊர்வசி ஊதுபத்திக் கம்பெனி ஓனர்!''
- இரா.கல்யாண சுந்தரம், மதுரை



காப்பு, காது குத்து, பூப்புனித நீராட்டு விழா, புதுமனை புகுவிழா என்று அத்தனைக்கும் போய்வந்தார் அப்பா. தன் இரு தம்பிகளைத் தலைமையாய் வைத்து வெவ்வேறு இடங்களுக்கு என்று அனுப்பினார். மெனு அப்பாதான்.

சாதி சம்பிரதாயங்கள் என்று அத்தனையும் அத்துப்படி அப்பாவுக்கு. இம்மி பிசகாமல் செய்து முடித்து விடுவார்.

'சிவகாமி கேட்டரிங்' என்ற பேனரைத் தொங்கவிட்ட ஒருநாளில் அப்பா மனத்தில் ஏற்பட்ட திருப்திக்கு அளவேயில்லை. அந்தப் பெயரைத் தேர்ந்தெடுத்திருப்பதாக அப்பா யாரிடமும் சொல்லவேயில்லை. அம்மா பெயரை வைத்தே ஆக வேண்டும் என்பதில் அத்தனை உறுதியிருந்தது அவரிடம். அது அப்பாவின் அன்பின் அடையாளம். உள்ளூர் திருமணங்கள் பிறகு வெளியூர் என்று திரிந்து கொண்டிருந்தவர்,



"சிக்கன் சிக்ஸ்டியோட வேறென்ன வேணும் சார்?"
"நான் கேட்டது சிக்கன் சிக்ஸ்டி இல்லேப்பா... சிக்கனமா ரெண்டு இட்லி!"
- இரா.கல்யாண சுந்தரம், மதுரை

அமைச்சரின் அழைப்பு வரும் என்று நினைக்கவேயில்லை. அசந்து போனார் அப்பா.

அந்த நிகழ்வுக்குப் பிறகுதான் அப்பா தமிழ்நாடு பூராவும் பிரபலமானார். கவர்னர் மாளிகை வரை போய் வந்துவிட்டார்.

உள்ளூர் அக்ரஹாரத்தில் ஆட்கள் இல்லை. எல்லாம் வெளி மாநிலம், வெளி நாடு என்று இடம்பெயர்ந்திருந்தன. பக்கத்து ஊர்களில் அலசலானார் அப்பா. அங்கங்கே அவரது போக்குக்கு ஒத்துவரும் ஆட்களைத் தேர்வு செய்தார். எதிர்பாராத சம்பளத்தைத் தந்து இழுத்து வந்தார்.

'சுத்தம் சோறு போடும். ஒழுக்கம் உயர்வைத் தரும். உண்மை நிமிர வைக்கும்.'

சிவகாமி கேட்டரிங்கின் தாரக மந்திரம் இதுதான்.

உச்சாணிக் கொம்பில் இருந்த ஒரு காலகட்டத்தில்தான் அவரை அந்தப் பக்கவாதம் தாக்கியது.

அப்பா பிரமித்தார். எப்படித் தேர் இழுக்கப் போகிறோம் என்று பயந்தார். அண்ணா கைகொடுத்தான் அப்போது.

"நான் போறேம்ப்பா... நீங்க கவலைப் படாதீங்கோ..."

கேட்டரிங் மானேஜ்மெண்ட் படித்திருந்தான் அவன். நிறைய நட்சத்திர ஓட்டல்களுக்குப் பயிற்சிக்குப் போய்வந்த அனுபவமிருந்தது அவனிடம். தன் உழைப்பை, தன் முனைப்பை, இன்னொருவனுக்குத் தத்தம் செய்வதற்குப் பதிலாக, நம் உயர்வுக்கே பயன்படுத்தினால் என்ன என்ற ஊக்கமிருந்தது அவனிடம். சம்மதித்தார் அப்பா. தமிழ்நாடு முழுக்க சிவகாமி கேட்டரிங் பவனி வந்து கொண்டிருந்த போதுதான், அப்பாவின் தவிர்க்க முடியாத மரணம் சம்பவித்தது.

உள்ளூர் அமைச்சரே நேரடியாக வந்து இரங்கல் தெரிவித்ததும், கண்ணீர் பெருக நின்றதும் மறக்க முடியாத காட்சிகள். அப்பா போன பின்னால் அத்தனை மதிப்பில்லாமல் போனது தம்பிகளுக்கு.

அப்பொழுதுதான் புரிந்தது அவர்களுக்கும். அவரை வைத்துத்தான் தாங்கள் என்று. அவர்தான் தாங்கும் சுவர். ஆனாலும் தொழில் சுத்தம் தர வேண்டாம் என்று யார் தடுத்தது? அடிப்படையான வீரியமிக்க விஷயங்களுக்கு என்று மாற்றம் வந்தது? தரம் நிரந்தரம். அப்பா தவறாமல் சொல்லு வார் இதை. அதைத் தம்பிகள் பின்பற்றி யிருக்க வேண்டாமா? இந்தத் தொழிலில் உள்ள எடுபிடித் தன்மைகள் அண்ணாவுக்கும் மசியாமல் போயிற்று. மசியாமல் என்று சொல்வதுகூடத் தவறுதான். பிடிக்காமல் போயிற்று. அதுதான் சரி. அவன் தன் திறமை பல மாய்ப் போற்றப்படும், முன்னிறுத்தப்படும் இடம் தேடிப் போய்க் கொண் டான். ஒருவேளை அப்பா இருந்திருந்தால் இது நடந் திருக்காதோ என்னவோ?

அப்பாவின் தம்பிகள் இருவரும் இன்று வெளி யூரில். ஊரைவிட்டு அவர் களே விலகிக் கொண்டார் கள். ஊர் போகச் சொல்ல வில்லை. தனி மனிதர்களின் குணக்கேடும், மெத்தன மும், வக்கிரங்களும் எல்லாமும் சேர்ந்து ஒரு பெரிய குழுவையே பாதித்து விடுகின் றன அல்லவா?

தான் நிற்க வேண்டிய இடத்தில் நின்று, சொல்ல வேண்டியதை மட்டும் சொல்லி, செய்ய வேண்டியதைச் செய்தால் தனக்கும் தன்னைச் சுற்றியுள்ளவர்களுக்கும் என்றும் குறைவில்லை என்பதை எத்தனை துல்லிய மாக உணர்ந்து வைத்திருந்தார் அப்பா.

எல்லாமும் பழைய நினைவுகளாய்ப் போயின இன்று. ஆனாலும் அவை அழி யாத, அழிக்க முடியாத ஆதர்ச நினைவுகள்.



**தரம் நிரந்தரம். இதை அப்பா தவறாமல் சொல்லுவார். அதை தம்பிகள் பின்பற்றியிருக்க வேண்டாமா?**

''அப்பாவோட திவசம் நெருங்கிட் டிருக்கு... ஞாபகமிருக்கில்லியா...?'' கேட் டுக்கொண்டே வந்து நிற்கிறாள் தேவகி.

''என்ன சொன்னே?''

''என்ன நீங்க? எந்த லோகத்துல இருக் கேள்? ஐப்பசி மாசம் வளர் பிறைல அப்பாவோட திதி வருதுன்னு சொன் னேன்...''

''சரி...'' அவனது ஒற்றை வார்த்தை பதில் கண்டு ஒன் றும் புரியாமல் சற்று நேரம் அவனையே பார்த்திருந்து விட்டு, தன் வேலையைக் கவ னிக்கப் போனாள் அவள்.

ரமணன் அந்த நாற்காலி யையே பார்த்துக் கொண்டிருந் தான். வலதுபுறம் பட்டையாய் பலகை பொருந்திய அதில் தான் தன் டைரியை வைத்து எழுதிக் கொண்டிருப்பார் அப்பா. சுற்றிவரத் தம்பிகளும் முதன்மைப் பணியாளர்களும் அமர்ந்து அவர் சொல்லச் சொல்லத் தேவையான பணி களைக் கவனமாய்க் குறித்துக் கொள்வார்கள். டைரியில் உள்ள குறிப்புகளும் அவர்கள் எழுதியதும் சரியாய் இருக்கிறதா என்று அவர்களை ஒருதரம் படிக்கச் சொல்லி சரிபார்ப்பார் அப்பா. 'இது அதுல சேர்த்துக்கோ... அதை எடுத்துரு... நன்னா தெரியற மாதிரி அண்டர் லைன் பண்ணிக்கோ... இல்லன்னா மறந் துருவ... எதுலயுமே ப்ரீ ப்ளானிங்தான் ரொம்ப முக்கியம். சரியாத் திட்டமிட் டுட்டா கரெக்டா நிறைவேத்திடலாம்... ரைட்... கிளம்புங்கோ எல்லோரும்...' அப்பாவின் குரல் காதுக்குள் ஒலித்தது. ●

# சிந்தனை முத்துகள்!

**சிரிப்போம் சிந்திப்போம்! தென்கச்சி கோ.சுவாமிநாதன், வானதி பதிப்பகம், 23, தீனதயாளு தெரு, சென்னை-17. விலை ரூ. 45.00**

'நீ பாட்டுக்குப் போயிட்டே.... இப்ப நானல்லவா நரகத்தில் இருக்கிறேன்..!' 'உன் மனைவி பேர்லே அவ்வளவு பிரியமா?' 'இல்லை...!' 'பின்னே...?' 'நான் சொன்னது என் மனைவியோட முதல் கணவனை!' - இதுபோன்ற சிரிக்க வைக்கும் நகைச்சுவைச் செய்திகள் கொண்ட பதினாறு கட்டுரைகளின் தொகுப்பு. சிரிக்க மட்டுமல்ல சிந்திக்க வைக்கும் வகையிலும் கருத்துக்களைத் தருகிறார். 'நாற்பது மைல் வேகத்துக்கு மேல் காரில் சென்று எங்கள் அருமையான சிறைச்சாலைக்கு விஜயம் செய்யுங்கள். ஐம்பது மைல் வேகத்துக்கு மேல் சென்று எங்களது அற்புதமான ஆஸ்பத்திரியில் படுத்துக் கொள்ளுங்கள்!' - இது ஒரு சான்று.

**ஜெனிபர் தாத்தா வீடு, 'மலை' ரத்தினசாமி, தேவி பதிப்பகம், கெம்பநாயக்கன்பாளையம், சத்தியமங்கலம். விலை ரூ.50.00**

கிராமங்களையும், எளிய மக்களையும் படம்பிடிக்கும் பதினைந்து சிறுகதைகள் அடங்கிய தொகுப்பு. நூலாசிரியரின் ஒரு கவிதையோடு தொடங்குகிறது. இதுபோன்றே சில கதைகளைத் தொடங்கி வைக்க அவர் வரைந்து காட்டும் கணங்களும் அழகு. சுவாரஸ்யமான பயணத்துக்கு அழைத்துச் செல்லும் நூல். சற்றுப் பெரிய அளவில் எழுத்துருக்கள் அமைத்திருந்தால், எளிய வாசிப்புக்கு உதவியிருக்கும்.

**உலகப் பொன்மொழிகளும், திருக்குறளும், வி.டி. இராமகிருஷ்ணன், மணிமேகலைப் பிரசுரம், தியாகராய நகர், சென்னை-17. விலை ரூ.45.00**

நூறு ஆங்கிலப் பொன் மொழிகளுக்கு இணையான திருக்குறள்களைத் தேர்வு செய்து தொகுக்கப்பட்ட நூல். குறள் விளக்கமும், பொன்மொழியோடு இயையும் பொருத்தமும் தொடர்ந்து அமைகின்றன. திருக்குறளை அடிப்படையாகக் கொண்ட நூல்களில் புதிய வடிவில் ஒரு வரவு.

- நேயமுகில்









# பேசிக்கிட்டேயிருங்க!

**- டாக்டர் விஜய் நாகஸ்வாமி -**

உலகில் நிரந்தரமானது மாற்றம்தான். அறிவு ரீதியாக, தொழில்நுட்ப ரீதியாக இந்த உலகில் மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டே இருக்கின்றன. இதற்கு மனித உறவுகளும் விதிவிலக்கு அல்ல. திருமணத்தைப் பற்றிய எதிர்பார்ப்புகளில், இன்றைய கம்ப்யூட்டர் தலைமுறைக்கும், முன்கால தாத்தா - பாட்டி தலைமுறைகளுக்கும் இடையே மலைக்கும், மடுவுக்குமான வித்தியாசம் இருக்கிறது.

திருமண விஷயத்தில் பெற்றோர்கள் வெளிப்படையான காரணங்களின் அடிப்படையில் லாஜிக்காகவும், இன்றைய தலைமுறையினர் உணர்வுபூர்வமாகவும் பார்க்கிறார்கள். நாம் இருவரும் திருமணம் செய்து கொண்டால் வாழ்க்கை மகிழ்ச்சியாக அமையும் என்ற உணர்வுதானே இல்லறத்தின் அஸ்திவாரம். அப்படி இல்லாமல், ஜாதகப் பொருத்தத்தால் மட்டுமே திருமணத்தைத் தீர்மானிக்கும் பெற்றோர்களின் முடிவினை ஒரு போதும் அவர்களால் ஏற்க இயலாது. திருமணத்துக்கு மற்ற எந்த விஷயங்களிலும் உள்ள பொருத்தத்தைவிட, மனப்பொருத்தம் மிகவும் முக்கியம் என்பதுதான் என் கருத்தும்கூட.

பதினெட்டு வயதில் இந்த நாட்டை ஆள்வதற்குத் தகுதியானவர் யார் என்று அலசிப் பார்த்துத் தீர்மானிக்கும் உரிமை கொண்ட அவர்களால், தங்களுக்கு வாழ்க்கைத் துணையாக யார் வரவேண்டும் எனத் தீர்மானிக்க முடியாதா என்ன? எனவே, அவர்களின் சந்திப்புகளுக்கும், உரையாடல்களுக்கும் பெற்றோர்கள் தடைபோட வேண்டிய அவசியமில்லை.

இன்றைய தலைமுறையினருக்கு நான் சொல்லும் ஆலோசனை இது: திருமணம் முடிவானதும், நீங்களும், உங்களுக்கு வரப் போகும் வாழ்க்கைத் துணையும் சந்தித்துப் பேச விரும்புவதாக உங்கள் பெற்றோர்களிடம் சொல்லத் தயங்காதீர்கள். அந்த வாய்ப்பை உங்களின் எதிர்கால மண வாழ்க்கை சிறப்பாக அமையப் பயன்படுத்திக்கொள்ளுங்கள்.

திருமணத்துக்கு முன்பு சந்திக்கிறபோது நிறையப் பேசுங்கள். உங்கள் குழந்தைப் பருவம் முதல், இன்றைய வாழ்க்கை வரை அனைத்தையும் பேசிக் கொள்ளலாம். உங்களுடைய குடும்பச் சூழ்நிலை, பிறந்து வளர்ந்த சூழ்நிலை, விருப்பு, வெறுப்புகள், குணங்கள் என்று எல்லாவற்றையும் பற்றி இரண்டுபேரும் பேசிக் கொள்கிறபோது, உங்களைப் பற்றி அவருக்கு ஓரளவுக்கு ஒரு ஐடியா கிடைக்கும். ஒருவர் எப்படிப்பட்டவர் என்பது பிடிபட்டுப் போனால், அவரது குணம், நம்முடைய குணத்துக்கு எந்த அளவுக்கு ஒத்துப் போகும் என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

'ஒரே ஊரில் பையனும், பெண்ணும் இருந்தால் நேரில் பார்த்துப் பேசுவது சாத்தியம். வெவ்வேறு ஊரில் இருந்தால் என்ன செய்ய?' எனச் சிலர் கேட்கலாம். ஹலோ! நீங்கள் எந்த உலகத்தில் இருக்கிறீர்கள்? இது இருபத்தொன்றாம் நூற்றாண்டு. தகவல் தொடர்புத் தொழில்

நுட்பம் எவ்வளவோ முன்னேறிவிட்டது. இருக்கவே இருக்கிறது செல்போன், இ-மெயில். அவற்றின் மூலமாகப் பேசுங்க! பேசுங்க! பேசிக்கிட்டே இருங்க! ஒருத்தரை யொருத்தர் புரிந்து கொள்ளும் வரை திறந்த மனத்துடனான பேச்சு கல்யாணத்துக்கான கான்கிரீட். ஒரே ஒரு சின்ன அட்வைஸ். நிஜமாக நடந்துகொள்ளுங்கள்; முகமூடி அணிந்துகொண்டு உங்கள் ஒரிஜினல் முகத்துக்குப் பதிலாக வேறு ஒரு இமேஜை ஏற்படுத்த முயலாதீர்கள். திருமணத்துக்குப் பின் உங்கள் முகமூடி தானாக மறைந்து விடும். அப்புறம் உங்களுடைய நிஜ முகம் வெளிச்சத்துக்கு வரும்போது, பிரச்னைகள் தான் அதிகமாகும்! அது மட்டுமின்றி உங்கள் மீதான நம்பகத்தன்மையும் கேள்விக்குறியாகும்.

வசதியாக வாழ்ந்த பெண்ணுக்கு, தான் திருமணம் செய்துகொண்டு மருமகளாக செல்லப் போகிற குடும்பம் எப்படிப் பட்டது என்று பேச்சு மற்றும் பழகுதலால் முன்னதாகவே தெரிந்தால், எதிர்பார்ப்புக்கும் யதார்த்த நிலைக்கும் இடையி லான இடைவெளி கணிச



**பேச்சு மற்றும் பழகுதலால் எதிர்பார்ப்புக்கும் யதார்த்தத்துக்கும் உள்ள இடைவெளி கணிசமாகக் குறையும்.**

மாகக் குறையும்.

இந்தத் திருமணம் நடந்தால் இரண்டு குடும்பங்களிலும் சந்தோஷத்துக்கு உத்திர வாதமில்லை என்பது முன்கூட்டியே புரியு மானால், நிச்சயத்தோடு அந்தத் திருமணத்தை நிறுத்த வாய்ப்புள்ளது. இல்லாவிட்டால் விவாகரத்து வரை போய் நிலைமையை மோசமாக்கிவிடக்கூடும்.

இன்று கூட திருமணத்துக்கு முன்னால் பையனும், பெண்ணும் பார்த்துப் பேசு வதை ஏற்றுக்கொள்ளாத பெற்றோர்கள் இருப்பது ஒரு பக்கம் என்றால், அதைச் செய்வதற்குத் தயங்கும் பையன்களும், பெண்களும் கூட உள்ளனர்.

''இவ்வளவையும் மீறி, சந்தர்ப்ப சூழ் நிலை காரணமாகவோ, இயல்பான தயக் கம் காரணமாகவோ, சமூகத் தடைகள் கார ணமாகவோ ஒரு பெண்ணும் அவள் கண வனும் திருமணத்துக்கு முன்னரே பார்த்துப் பேச முடியாமல் போகலாம். திருமணம் முடிந்த முதல் வருடத்தை நீங்கள் பேசுவ தற்குப் பயன்படுத்தி, ஒருவரையொருவர் நன்றாகப் புரிந்து கொள்ளுங்கள்!'' அப் போதுதான் 'லவ் கெமிஸ்ட்ரி' சரியாக அமையும்.

'லவ் கெமிஸ்ட்ரி' என்றால் என்ன?

(அழைப்பு தொடரும்)

எழுத்து வடிவம் : எஸ்.சந்திரமௌலி

வெயிலில்
விளையாடிக்கொண்டிருக்கிறாயா?
வெகுளித்தனமாகச்
சிரித்துக்கொண்டிருக்கிறாயா?
இளையராஜாவின்
இசையில் இணைந்திருக்கிறாயா?
இளந்தூறல்
மழையில் நனைகின்றாயா?
களையெடுக்க
களத்துமேட்டுக்குச் செல்கின்றாயா?
மேற்படிப்புக்காக
மெட்ராசுக்குச் செல்கிறாயா?
பதினாறு புள்ளிக் கோலத்தை
வரைந்து பார்த்துக்கொண்டிருக்கிறாயா?
பக்கத்துவீட்டு அக்காவிடம்
கதைபேசிக் கொண்டிருக்கிறாயா?
என்ன செய்துகொண்டிருக்கிறாய்?
உனக்காக ஒருத்தி பிறந்திருப்பாளென்று
சொன்னாள் அம்மா.
என்னதான் செய்துகொண்டிருக்கிறாய்
நீ...

- துளிர்,
ஆரப்பாளையம், மதுரை



# மீனாக்ஷி மகிமை!

ஜோதி ஹரிகிருஷ்ணன்



**சக்தியையும் சிவனையும் எப்படிப் பிரித்துப் பார்க்கமுடியாதோ... அப்படித்தான் மதுரையும் மீனாட்சியும். பாண்டிய மன்னனின் மகளாக தடாதகைப் பிராட்டி தோன்றி அரசாட்சி புரிந்ததால் மதுரைக்கு மீனாட்சிப் பட்டினம் என்ற பெயர் உண்டு...**

மீன் எப்படி தன் பார்வையால் தூரத்தில் இருக்கிற தன் முட்டைகளைப் பாதுகாத்து, பொரித்து, மீன் குஞ்சுகளாக மாற்றுகிறதோ அதுபோல் மீனாட்சியும் தன் பக்தர்களைக் காத்து அருள்பாலிக்கிறாள்.

பிற ஆலயங்களில் தரிசிப்பது போல சிவனை முதலில் வணங்கிவிட்டு பின் அம்மனைக் காண்பது போல மதுரையில் வணங்கக் கூடாது. இங்கு மீனாட்சியே அரசி. பட்ட மகிஷி. சிவனோ மனைவியின் வீட்டில் இருப்பவர். எனவே முதலில் மீனாட்சியை வணங்கிவிட்டு, பின் சிவனைத் தரிசிப்பது மதுரை மரபு.

மரகதக் கல்லால் ஆனது மீனாட்சியின் சிலை. கலைமகள், திருமகள், மலைமகள் என முப்பெரும் தேவியரின் அம்சமாக மீனாட்சி இருப்பதால், பக்தர் வேண்டும் அனைத்தும் நல்கும் அன்னையாக இருக்கிறாள். சிவன் இந்தக் கோயிலில் லிங்க வடிவில் அருள்பாலிக்கின்றார்.

பிரம்ம ஹத்தி தோஷத்தால் பிடிக்கப்பட்ட இந்திரன், பல புண்ணியத் தலங்களுக்குச் சென்றும் கங்கை முதலான புண்ணிய நதிகளில் நீராடியும் பயன்



* ஸ்ரீ மீனாட்சி

இன்மையால், வியாழ பகவானை பூலோகத்துக்கு வரவழைத்து தோஷம் விலக வழி கேட்டான். அவர் சொற்படி கடம்பவனத்தின் அருகே சென்றபோது பீடித்திருந்த தோஷம் அவனை விட்டகன்றது.

''தெய்வத் தன்மை வாய்ந்த அதிசயம் மிக்க சிவலிங்கம் ஒன்று தீர்த்தக் கரையில் உள்ள கடம்ப மரத்தின் நிழலில் இருப்பதைக் கண்டறிந்த இந்திரன், தேவ தச்சனை அழைத்து, விமானம் அமைத்து கோயில் கட்டினான். பூஜிக்க மலர்களைத் தேட, மலர் இல்லாமையால் வருந்தினான். உடனே அந்தத் தீர்த்தத்தில் பொற்றாமரை மலர்கள் தோன்றின. பொற்றாமரைத் தீர்த்தம் எனப் பெயரிட்டான்.

விண்ணிலிருந்து இறங்கிய மாணிக்க விமானத்தை, எட்டு யானைகளும் முப்பத்து இரண்டு சிங்கங்களும், அறுபத்து நான்கு சிவகணங்களும் தாங்கி இருந்தன.

தொண்டர்க்குத் தொண்டனாக ஆசைப்பட்ட இந்திரன், சித்ரா பௌர்ணமி தோறும் வந்து வழிபட்டுச் செல்கிறான்.

**க**ண்ணகியின் சீற்றத்தால், மதுரை அழிந்தபோது மீனாட்சி கோயிலில் படுத்திருந்த சீத்தலைச் சாத்தனார் எந்தவிதப் பாதிப்பும் இன்றிச் சேர நாடு சென்றார். பாண்டிய மன்னர்களால் பராமரிக்கப்பட்ட கோயில் பிற்கால அரசர்களாலும்

பாதுகாக்கப்பட்டு வந்தது.

கி.பி.1310ல் தமிழ்நாட்டின் மேல் படையெடுத்து வந்த மாலிக்காபூர், இக்கோயிலைத் தரைமட்டமாக்கியதாகவும், பிறகு புதிதாக எழுப்பப்பட்டதே இப்போதைய கோயில் என்றும் கூறுகிறார்கள். 17ம் நூற்றாண்டில் திருமலை நாயக்கர், கோயிலை விரிவாக்கினார்.

அண்மையில் பொற்றாமரைக் குளத்தில், பொன்னால் ஆன பெரியதோர் தாமரை மலரை மிதக்க விட்டுள்ளனர். இந்தக் குளத்து சங்கப் பலகையில்தான் புலவர்களின் நூல்கள் வைத்து ஏற்கப்பட்டன.

உலகப் பொதுமறையான திருக்குறளும் இங்கு அரங்கேறிய நூல்தான். பொற்றாமரைக் குள சுற்றுச் சுவரில் 1330 குறட்பாக்களும், திருக்குறள் ஆர்வலர்களின் மூலம் பொறித்து வைக்கப்பட்டுள்ளன. ஐந்து கோபுரங்களைக் கொண்டது இக் கோயில். தெற்கு வாசல் கோபுரமே மிக உயரமானது.



திருமலைநாயக்கர் வண்டியூரில் வசந்த மண்டபம் கட்டும்போது கிடைத்தவர் முக்குறுணிப் பிள்ளையார்.

திருமலை நாயக்கர், வண்டியூரில் வசந்த மண்டபம் கட்டும்போது கிடைத்தவர் முக்குறுணிப் பிள்ளையார். அம்மன் சன்னிதியிலிருந்து சொக்கநாதர் சன்னிதி செல்லும் வழியில் அமர்ந்து இருக்கிறார். சதுர்த்தி அன்று மூன்று குறுணி அரிசியால் ஒரே ஒரு மோதகம் இவருக்குப் படைக்கப்படுவதால் இப்பெயர் பெற்றார்.

திருஞான சம்பந்தர் சைவம் தழைக்க மதுரை வந்தபோது, அரசி மங்கையர்க்கரசியும் அமைச்சர் குலச்சிறையாரும் வணங்கி வரவேற்றனர். பின் அரசனது வெப்பு நோயைத் தீர்த்து, கூன் பாண்டியனை நின்ற சீர் நெடுமாறன் ஆக்கினார். இந்த மாற்றத்தை,

'மந்திரம் ஆவது நீறு'

என கோயில் மடப்பள்ளி சாம்பலைக் கொண்டு நிகழ்த்தியதால், இப்போதும் மடப்பள்ளி சாம்பல் அம்மன் சன்னிதிக்கு முன்பும், சொக்கநாதர் சன்னிதி போகும் வழியிலும் பிறையில் வைக்கப்பட்டுள்ளது.

அகத்தியரும் அடியார்களும் மகிழ, சோமசுந்தரர் திருமணக் கோலம் காட்டிய இடம் இது. ஆதலால் வருடந்தோறும் திருக்கல்யாண நிகழ்ச்சி நடைபெறுகிறது. இந்தத் திருக்கல்யாணத்தின் போது, மணமாகாத ஆடவர் பெண்டிர் யாராக இருப்பினும், அவர்களோ, அவர்களது உறவினரோ வந்திருந்து 'திருமணம் கைகூடவேண்டும்' எனப் பிரார்த்தித்துச் செல்ல வேண்

டும். வேறு சாதாரண நாட்களிலும் பிரார்த்தனை செய்யலாம். பிரார்த்தனை நிறைவேறியபின் மஞ்சள், குங்குமம் சேர்த்து திருமாங்கல்யச் சரடு நூறு, ஆயிரம் என பக்தர்களுக்கு வழங்குகிறார்கள்.

திருவிளையாடல்களில் ஒன்றாகிய இசை வாதில் பாணபத்திரருக்கு உதவிய ஈசன் மற்றுமொரு விளையாடலைச் செய்து அவருக்குப் பொருள் தர விரும்பினான். வறுமையில் வாடிய தருமியைப் போல பாணபத்திரரும் பொருள் வேண்டி நின்றார். இறைவனைப் பாடினார். அரசக் கருவூலத்திலிருந்து பொன்னும் பொருளும் வந்தன. இதை அரசன் அறிந்தால் கருவூலக் காப்பாளர் தண்டிக்கப்படுவாரோ என பயந்த சொக்கேசன்

''மதி மலி புரிசை சூழ்'

எனும் பாசுரத்தை எழுதி, எனது நண்பன் சேரமான் பெருமான் நாயனாரிடம் இந்த திருமுகப் பாசுரத்தைத் தந்து பொருள் பெற்றுக்கொள் என அறிவுறுத்தினார். இந்தச் செய்தியை சேரமான் பெருமான் கனவிலும் சென்று உணர்த்தினார். பாணபத்திரரும் பொன்னும் பொருளும் பெற்று மகிழ்ந்தார். இந்தப் பாடல் பதினொன்றாம் திருமுறையில் முதல் பாடலாக உள்ளது. இறையனார் எழுதியது.

மீனாட்சியை மட்டுமல்ல, நம்மையும் சொக்க வைக்கும் இந்த ஈசனாரைத் தரிசிக்க, நம் பாவங்கள் நெருப்பிற் பட்ட பஞ்சாகும். விடியற்காலையில் தரிசிக்க, பெரிய பூமியைத் தானம் தந்த பலனும், உச்சிக் காலத்தில் தரிசிக்க ஆயிரம் பசுக்களைத் தானம் தந்த பலனும், மாலையில் தரிசிக்க கோடிப் பசுக்களைத் தானம் தந்த பலனும், நடு இரவில் தரிசிக்க பரிவேள்வி (அசுவமேதயாகம்) செய்த பலனும் உண்டாகும். நான்கு ஜாமத்திலும் முறையாக வணங்க எல்லா செல்வங்களும், நலன்களும் பெற்று, முடிவில் வீடு பேறு அடைவர்.

கணவன் மனைவி இடையே பூசல், பிரி வினை இருப்பின் பள்ளியறை பூசையில் கலந்து கொண்டு, இறைவனுக்கும் இறைவிக்கும் படைத்த பால் அருந்தினால் அன்பு பெருகும், ஒற்றுமை உண்டாகும்.

இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி எனும் முப்பெரும் சக்திகளை உள்ளடக்கிய மரகத மீனாட்சியைத் தரிசித்தால், இகபர சுகங்களும், கல்வி கேள்விகளில் மேன்மையும் உண்டாகும். மாதங்கி, ராஜ சியாமளை என்பதால் இசை, ஜோதிடம், சிற்பம் போன்ற கலைகளில் தேர்ச்சி பெறலாம்.

**படங்கள்:**
**மதுரைச் சுற்றுலாத்துறை**



அன்றைய பிரதமர் வாஜ்பாய், களஞ்சியம் சுய உதவிக் குழுவின் சேவையைப் போற்றும் விதமாக அதன் தலைவி மதுரை சின்னப்பிள்ளையின் காலில் விழுந்து வணங்க, ஒட்டுமொத்த இந்தியாவுக்கும் அவர் ஆச்சர்யமானார்! இப்போது எப்படி இருக்கிறார் சின்னப்பிள்ளை? அவரது சொந்த ஊரான பில்லுச்சேரிக்குச் சென்றோம்.

அமைதியான அதிகாலைப் பொழுது. விசிவிட்டெறிந்த விதைகள் போல் அங்கொன்றும் இங்கொன்றுமாய் குடிசைகளும், மிகச்சிறிய வீடுகளும். 'சின்னப்பிள்ளை வீடு?' - எதிர்ப்பட்டவரிடம் கேட்டோம். அவர் காட்டிய பக்கம் திரும்பினால், அலுமினியக் கிண்ணம் ஒன்றில் தண்ணீர் கொண்டு, வாசல் தெளித்துக்கொண்டிருந்தார் சின்னப் பிள்ளை!



''எந்த கிராமம் டவுன்னு மாறிமாறி எத்தினி நாளுக்கு சுத்தி அலைஞ்சாலும் சரி. கடைசியா இந்தப் பில்லுச்சேரி மண்ணுல வந்து இறங்கினாதான் மனசு ஒரு நிலைக்கு வரும். ஒரு காலத்துல பில்லு மண்டிக்கிடந்த ஏரியா. எங்காளுங்க இங்க வந்து அந்தப் பில்லுகளைச் செதுக்கிப் போட்டு குடியேறின பிறகுதான் பில்லுச் சேரின்னு பேர் வந்துச்சு. இங்கேயிருந்துதான் 'கொத்து மேஸ்திரி'யா வயல் வேலைக்கு வெளியே கிளம்பினேன். அப்ப எங்காளுங்க எல்லாருமே, படாத கஷ்டம் பட்டோம். 'தானம்' அறக்கட் டளைலேருந்து வாசிமலை, நரேந்தர், சுமதி, உமாராணி... நாலு பேரும் வந்து எங்க கிட்ட பேசினாங்க. அப்ப ஆரம்பிச்சது

# "எனக்கு மட்டும்னா வேணாம்!"

களஞ்சியம் மகளிர் சுய உதவிக் குழு.

களஞ்சியம் மகளிர் சுய உதவிக் குழுக்கள், எண்ணிக்கை யில் பல மடங்கு பெருகிச்சு. ஒரே வருஷத்துலயே பாரதப் பிரதமர், தமிழக முதல்வர், மும்பை பஜாஜ்னு

மூணு முக்கியஸ்தர்கள் கையிலேருந்து விருதுகள் கெடைச்சது எனக்கு! எங்களை அந்த அளவுக்கு தானம் அறக்கட்டளை வழி நடத்திப்போச்சு!'' எனச் சொல்லிக் கொண்டிருக்கும்போது, அவரது பேரன் குறுக்கே ஓடுகிறான். அவனை அழைத்து, குளிப்பதற்காக தண்ணீர் கொண்டு வந்து ஒரு சில்வர் அண்டாவில் ஊற்றச் சொல்கிறார் சின்னப்பிள்ளை.

''குளிச்சிட்டு எட்டரை பஸ் பிடிச்சு மதுரை ஆபீஸுக்குப் போகணும்!'' என்கிறார். திண்ணையில் அமர்ந்தவர் கண்களில் படுகிறது தண்ணீர் நிரம்பிய சில்வர் அண்டா. கீழ் பாகத்தில் ஒரு சிறு ஓட்டை. தண்ணீர் சிந்தி வெளியேறுகிறது. எழுந்து சென்று வீதி மண் எடுத்து அந்த ஓட்டையை அடைத்து விட்டு வந்து பேச்சைத் தொடர்கிறார்.

''அந்த மூணு விருதுகள் வாங்கும்போதும் பனை ஓலைக் குடிசையில தான் இருந்தேன். அப்புறமா கலெக்டர் ஆபீஸ்லேர்ந்து வந்து எனக்கு மட்டும் கெட்டி வீடு கட்டித்தர்றதா சொன்னாங்க. எனக்கு மட்டும்னா வேணாம்னு மறுத்துட்டேன். என்னைச் சுத்தியும் எங்காளுங்கதான் இருக்காங்க. அவுங்களுக்குக் கட்டித் தரும்போது எனக்குக் கட்டிக் குடுங்க... போதும்னுட்டேன். அப்புறம் மூணு வருசம் அஞ்சாறு பேருக்குக் கட்டித் தந்தாங்க. அதுல ஒண்ணுதான் இது.

எனக்கு ஆடம்பரம் பிடிக்காது! தேவையில்லாம ஒரு ரூபாய்கூட செலவு பண்ண மாட்டேன். சாகிற வரைக்கும் எளிமையா இருக்கணும். இதுதான் என்னோட வாழ்க்கை. விருதுகள் வாங்கினதுக்கு மொத வருசமே என் வூட்டுக்காரர் செத்துப் போய்ட்டாரு. ரெண்டு பையன்க. கல்யாணம் ஆய்டுச்சு. மூணு பேரன்க. மூணு பேத்திங்க. எல்லாம் பக்கத்துலதான் இருக்காங்க. பையன்க வேலைக்குப் போறாங்க.

களஞ்சியம் மகளிர் சுய உதவிக் குழுக்கள் தற்போது பதினொரு மாநிலங்கள்ல இயங்கி வருது. 20,496 மகளிர் சுய உதவிக்குழுக்கள். மொத்தம் சுமார் ஐந்து லட்சம் பெண்கள். இது ஒரு இயக்கம். இதுல நாற்பதாயிரம் தலைவிகள் இருக்காங்க. அவுங்க ஒவ்வொருத்தரும் ஒரு சின்னப்பிள்ளைக்குச் சமம். காரணம், அத்தனை பேரும் அவ்வளவு எளிமை. நாற்பதாயிரம் சின்னப்பிள்ளைகளைத் தலைவிகளாகக் கொண்டது களஞ்சியம். குளிச்சிட்டுக் கிளம்பணும். அப்புறம் டவுன் பஸ் பிடிக்க முடியாது!'' - பிரமிக்க வைக்கிறார் பில்லுச்சேரி சின்னப்பிள்ளை.



## உசிலம்பட்டி பயங்கரம்!

# கருவிலேயே

மதுரை உசிலம்பட்டி, பெண் சிசுக் கொலை பிரச்னைக்காக தலைநகர் டெல்லி வரைக்கும் பேசப்பட்ட ஊர். 1986ல் பத்திரிகைகளில் வெளியாக ஆரம்பித்த பெண் சிசுக் கொலை செய்திகளை மறுத்த தமிழக அரசு, 1990களில் அதை ஒப்புக்கொண்டது. சமூக அமைப்புகளும் அரசாங்கமும் சிறப்புக் கவனம் செலுத்த ஆரம்பித்தன. கடுமையான சட்டங்கள் இயற்றப்பட்டு தண்டனைகள் நிறைவேற்றப்பட்டன. "இப்போது மதுரை மாவட்டத்தில் பெண்சிசுக் கொலை இல்லை" என்று அறிவித்து இருக்கிறது தமிழக அரசின் சுகாதாரத்துறை. அப்படியா...!? அறிந்துகொள்ள களத்தில் இறங்கினோம்...

"உண்மைதான். ஆனால், உசிலம்பட்டி வட்டாரத்திலுள்ள மக்கள், பெண் குழந்தை பெத்துக்கறதையே இப்பவும் பாவமாத்தான் நினைக்கறாங்க. முன்னெல்லாம், பிறந்ததும்தான் கொல்வாங்க. இப்ப தனியார் ஸ்கேன் மையங்கள் பெருகிடுச்சு. இரண்டு மூணு மாசம் கர்ப்பமா இருக்கும்போதே ஆணா... பெண்ணான்னு பார்த்து, பெண்ணா இருந்தா கலைச்சுடுறாங்க. குழந்தையோட பாலினத்தைச் சொல்லக் கூடாதுன்னு சட்டம் இருக்கறதால, ஸ்கேனிங் சென்டர்ல, ஆண் குழந்தையா இருந்தா மீசை வரைஞ்சும் பெண்குழந்தையாய் இருந்தா மூக்கு மேல விரலை வெச்சும் (மூக்குத்தி)காண்பிக்கிறாங்க. டாக்டர்ஸும் காசுக்கு ஆசைப்பட்டு, கருக்கலைப்பு செய்யறதை தொழிலாகவே பண்றாங்க. சமீபத்துலகூட திருமங்கலத்துல ஒரு டாக்டரை எதிர்த்துப் போராட்டம் பண்ணினோம். அதை சாதிப் பிரச்னையாக்கி, கோர்ட் வரைக்கும் போச்சு. பெண் சிசுக் கொலை குறைஞ்சாலும் அதுக்கான காரணம் மட்டும் அப்படியேதான் இருக்கு" என்கிறார் எஸ்.ஐ.ஆர்.டி. என்ற என்.ஜி.ஓ.வின் உதவி இயக்குநர் மகராஜன்.

* லோகமணி



* மகராஜன்



* பாக்யலக்ஷ்மி



"பெண் குழந்தைன்னு தெரிஞ்சுக்கிட்டு கருக்கலைப்பு பண்றது உண்மைதானா?" பெரியசெம்பேட்டுப்பட்டி சுய உதவிக்குழு ஊக்குநர் லோகமணியிடம் பேசினோம். "உண்மைதாங்க, கர்ப்பமானதும், ஆணா பெண்ணான்னு தெரிஞ்சுக்க ஜோசியம் பாக்கறது, குறி கேட்கிறதுன்னு போறாங்க... கொஞ்சம் விவரம் தெரிஞ்சவங்க ஸ்கேன் சென்டருக்குப் போறாங்க. பெண் குழந்தைன்னு தெரிஞ்ச உடனே, இதை வீட்டுல எப்படிச் சொல்வேன்னு அழறாங்க. அப்படியே மறைச்சாலும், குழந்தை பிறந்த பிறகு அவங்களை நடத்துற விதத்துலே நொந்துபோயிடுறாங்க. பெத்துக்கிட்டு அழறதைவிட பெத்துக்காமலே அழலாம்னு கருக்கலைப்பு முடிவுக்கு வந்துடுறாங்க" என்கிறார்.

"தாய்மார்கள் என்ன

# கல்லறை!



"மதுரை மாவட்டத்தில் 2006ஆம் ஆண்டு பிறந்த மொத்தக் குழந்தைகளில் ஆண்கள் 6300; பெண்கள் 5128. ஏனிந்த ஏற்றத்தாழ்வு?"

நினைக்கறாங்க...?'' "ஆம்பளைப் பிள்ளை இல்லாதவங்களுக்கு எங்க சமூகத்துல மரியாதை கிடையாது. ஏதாவது பேசினா, ஆமாம், ஊரானுக்குப் புள்ளையைப் பெத்து வெச்சுக்கிட்டு ஊர் நியாயம் பேச வந்துட்டியான்னு கேட்கிறாங்க. நாங்க திருந்த நினைச்சாலும் சுத்தி இருக்கறவங்க விடமாட்றாங்க. கர்ப்பத்துலேயே கலைக்காம என்ன பண்ணுவாங்க?'' என்கிறார் உசிலம்பட்டி பாக்யலட்சுமி

***பெண் சிசுக் கொலை மற்றும் கருக் கொலைக்கு எதிரான பிரசார இயக்கத்தின் மையக் குழு உறுப்பினர் ஜீவாவிடம் பேசினோம்.***

1990ம் வருடத்திலேயே இயற்கையாக இருக்கவேண்டிய எண்ணிக்கையைவிட 100 மில்லியன் பெண்கள் குறைவாக இருக்கின்றனர் என்கிறார் பொருளாதார நிபுணர் அமெர்த்தியா சென். ஒவ்வொரு வருடமும் ஐம்பது லட்சம் பெண்கள் தங்கள் உயிரையும் உடலையும் பற்றிக் கவலைப் படாமல் கருக் கலைப்பு செய்வதாக இந்திய மருத்துவக் கழகம் தெரிவிக்கிறது. ஆரம்ப சுகாதார நிலையங்கள் தரும் புள்ளிவிவரப்படி 1000 ஆண் குழந்தைகளுக்கு 971 பெண் குழந்தைகள் இருக்க வேண்டும். ஆனால் தமிழகத்தில் ஒரு சில மாவட்டங்களைத் தவிர மற்ற மாவட்டங்களில் இன்றைக்கும் இது கனவு தான். அதுவும் மதுரை மாவட்டத்தில் . ிலைமை இன்னும் மோசம். 706ட் ஆண்டு மதுரை மாவட்டத்தில் பிறந்த குழந்தைகளில் ஆண் குழந்தைகளின் எண்ணிக்கை 6300; பெண் குழந்தைகளின் எண்ணிக்கையோ 5128தான். ஏனிந்த நிலைமை? தர்மபுரி, சேலம், ஈரோடு... போன்ற மாவட்டங்களில் சமூகக் காரணங்களுக்காக இறந்த குழந்தை

கள் என்ற ஒரு பட்டியலை வைத்து இருக்கிறது தமிழக அரசு. ஆனால், மதுரை மாவட்டத்தில் அந்தப் பட்டியலே இல்லை! காரணம் கேட்டால் இங்கேதான் பெண் சிசுக் கொலை இல்லையே என்கிறார்கள். பிறகு எப்படி பெண் குழந்தைகளின் பிறப்பு எண்ணிக்கை குறைகிறது என்றாவது அரசு கவனம் செலுத்த வேண்டுமல்லவா? விஞ்ஞானம் சொல்கிற படி ஒரு வருடத்தில் 100 பெண் குழந்தைக்கு 105 ஆண்குழந்தைகள் பிறந்தாக வேண்டும். இயல்பிலேயே பெண் குழந்தையைக் காட்டிலும் ஆண் குழந்தை பிறந்ததும் இறப்பதற்கான சாத்தியக்கூறு அதிகம். எனவே ஐந்து ஆண்குழந்தை இறந்தால் கூட விகிதாசாரம் சமன்படும். இந்நிலையில் ஒரு பெண் குழந்தை இறந்தால்கூட அது கொலையாக இருக்கவும் வாய்ப்பு இருக்கிறது'' என்கிறார் ஜீவா.

''முறைப்படுத்தப்படாத கண்காணிப்புத் துறை ஆட்களாக இருந்தால் முறைகேடுகள் குறைய வாய்ப்பு இருக்கிறது. மேலும், குடும்பக் கட்டுப்பாட்டை பிரசாரம் மூலம் மக்களிடம் கொண்டு சென்றது போல பெண் குழந்தையைப் போற்றும் அவசியத்தையும் கருக்கலைப்புத் தடையையும் பிரசாரம் மூலம் உணர்த்தவேண்டும்.

பெண்களுக்கென அரசாங்கம் செயல்படுத்தும் பிரத்யேகத் திட்டங்கள் இந்தப் பகுதிக்கு வந்து சேராததும் இக்கொடுமை தொடர்வதற்குக் காரணமாக இருக்கிறது. சமூகத்தில் ஆணுக்கு இணையாகப் பெண்ணை நடத்துவதும், பெண்களின் முக்கியத்துவத்தை உணர்த்துவதும் அவர்களுக்கான பொருளாதாரப் பின்னணியை உருவாக்கித் தருவதும்தான் தீர்வாக அமையும்'' என்கிறார் ஜீவா.


● ஜீவா

மதுரை மாவட்ட ஊரக நல மற்றும் சுகாதாரச் சேவைகளுக்

## ''அரசாங்கத்தால் பெண்களுக்கென்று பிரத்யேகமாகக் கொண்டுவரப்படும் திட்டங்கள், உசிலம்பட்டி வட்டாரத்தை சரிவர எட்டாததும் பெண் கருக்கலைப்புக்குக் காரணம்!''

ஸ்கேன் மையங்கள் அதிகமாகிவிட்டன. ஸ்கேன் செய்யப்படும்போது, குறிப்புகள் எடுக்கும் படிவத்தில், ஃபார்ம் ஃபைவ் என்ற பகுதியில் கர்ப்பிணிகளுக்கான அறிவுரை வழங்க வேண்டும். ஆனால், பெரும்பாலான ஸ்கேன் மையங்களில் அதைக் கண்டுகொள்வது இல்லை. மாவட்ட சுகாதாரத் துறை என்றைக்காவது இதுபோன்ற ஸ்கேன் மையங்களில் கர்ப்பிணிப் பெண்ணை அனுப்பி சோதனை செய்தால், அங்கு நடப்பது வெளிச்சத்துக்கு வரும். இந்த மையங்களே டாக்டர்களுக்குச் சொந்தமானவை என்பதால் அவை சோதனைக்கு உட்படாமல் தப்புகின்றன! ஸ்கேன் மையங்களை தணிக்கை செய்வோர் மருத்துவத் துறைக்குச் சம்பந்தமில்லாத காவல் துறை அல்லது கான இயக்குநர் திருமாவளவனிடம் மேற்கூறிய புகார் குறித்துக் கேட்டோம்... நான், வேலையில ஜாயின் பண்ணி இரண்டு வாரம்தான் ஆகுது. நீங்கள் கேட்கறதுக்குச் சரியான தகவல்கள் என்னால் தர இயலாது. நீங்கள் சுகாதாரத் திட்ட ஒருங்கிணைப்பாளர் டாக்டர் அமுதாவிடம் பேசுங்கள்'' என்றார். அவரிடம் கேட்டபோது, ''இதுக்கு நான் பதில் சொல்லக்கூடாது... ஆனாலும், சொல்றேன். நீங்கள் சொல்வது போன்ற புகார்கள் எங்கள் கவனத்துக்கு வருவதில்லை. வருகிற பட்சத்தில் ஸ்கேன் மையங்கள் மீது நடவடிக்கை பாயும்'' என்றார்.

கைப் புண்ணுக்குக் கண்ணாடி தேடற நேரத்துல எத்தனை சின்னஞ்சிறு கண்மணிகளை இழக்கப் போகிறோம்! ●




# வடமலையான்... திடமலையான்..!

அந்த அம்மாவுக்கு என்ன செய்வதென்றே விளங்கவில்லை. எட்டு வயது மகள். சில ஆண்டுகளாக வயிற்று வலி. துடிப்பாள். கண்ணீர் மல்குவாள். ஏழைத் தாயால் என்ன செய்ய இயலும்? அதுவும் கிராமம் வேறு. கை வைத்தியம் செய்து பார்த்தாள். அவ்வப்போது மெடிக்கல் மாத்திரை, ஆரம்ப சுகாதார நிலையம், அரசு மருத்துவமனை என அல்லாடினாள் அந்தத் தாய். எல்லாவற்றுக்கும் 'பெப்பே' காட்டிய படி அந்தச் சிறுமிக்குள் காசநோய் பரவியது. ஆனால், தீராத வயிற்று வலிக்கு மட்டும் காரணம் என்ன என்று கண்டுபிடிக்க முடியவில்லை.

யாரோ ஒருவரின் ஆலோசனை கேட்டு, மதுரை வடமலையான் மருத்துவமனைக்கு வருகிறார்கள் அந்தச் சிறுமியும் அவளது தாயும். அதிநவீன கருவிகள் மூலமாக மருத்துவப் பரிசோதனை செய்யப்படுகிறது. என்ன ஆச்சர்யம்! அந்தச் சிறுமியின் தீராத வயிற்றுவலிக்கான காரணம் தெரிந்து விட்டது. பெருங்குடல் அதன் சுற்றுப் பாதையிலிருந்து சற்று விலகிச் சென்று, அந்த இடத்தில் அடைப்பு இருப்பது கண்டறியப்பட்டது. நவீன சிகிச்சை வாயிலாக பெருங்குடல் சுற்றுப்பாதை சரிசெய்யப்பட்டு அதன் அடைப்பு நீக்கப்பட்டது.

அந்தச் சிறுமிக்கு வயிற்று வலி வந்த

இடம் தெரியாமல் மறைந்து போனது. அந்த ஏழைத் தாய்க்கு ரொம்பச் சந்தோஷம். அடுத்த நிமிடமே பெருங்கவலை குடிகொண்டது. மருத்துவக் கட்டணம் எவ்வளவு சொல்வார்களோ? நம்மால் தர இயலுமா? என்றெல்லாம் சிந்தனை.

மருத்துவமனையின் நிர்வாக இயக்குனர் டாக்டர் புகழகிரி வடமலையான் அவர்களின் பார்வைக்கு இது கொண்டு செல்லப் பட்டது. ஏழைகளுக்கான எளிய சேவையே அவரது லட்சியக் கனவுகளில் ஒன்று. எழுபதாயிரம் ரூபாய் மருத்துவக் கட்டணம், பத்தாயிரம் ரூபாயாக மட்டுமே பெற்றுக் கொள்ளப்பட்டது. அந்த ஏழைத் தாயின் கண்களில் ஆனந்தக் கண்ணீர்.

கூலித் தொழிலாளியின் மனைவி, சிக்கலானது.

எக்டோபிக் பிரசவம் செய்வதன் மூலமாக கரு அகற்றப்பட்டு, கூலித் தொழிலாளியின் மனைவியின் உயிர் காப்பாற்றப்பட்டது. ஐம்பதாயிரம் ரூபாய் மருத்துவக் கட்டணம். கூலித் தொழிலாளி என்பதனைக் கருத்தில் கொண்டு, கட்டணம் வேண்டாம் என்று மறுத்துவிட்டது மருத்துவமனை நிர்வாகம். கூலித் தொழிலாளிக்கும், அவரது மனைவிக்கும் மனம் ஒப்பவில்லை. எங்களால் இயன்றது, ஐந்தாயிரம் ரூபாய்... அதனை அவசியம் பெற்றுக் கொள்ளுங்கள் என மனமுவந்து தந்துள்ளனர்.

ஐம்பதாண்டு கால வடமலையான் மருத்துவமனை சேவைகளில் இப்படியாக இன்னும் பல சம்பவங்கள்...

## தென் தமிழகத்தின் தேசிய நெடுஞ்சாலைகளில் (ஏழு இடங்களில்) விபத்து அவசர ஊர்தி வசதிகளைச் செயல்படுத்திய முதல் மருத்துவமனை.



மூன்று மாத கர்ப்பம். கர்ப்பத்தில் பிரச்னை. கர்ப்பப்பையில் கரு உருவாகாமல், கருப் பைக்குச் செல்லும் குழாய்ப் பகுதியில் கரு உருவாகி வளர்ந்து வருகிறது. இது மிகவும் ஆபத்தானது. தாய், சேய் இருவரின் உயிருக் கும் உலை வைக்கக் கூடியது. இதற்கு எக்டோபிக் பிரசவம் எனப் பெயர். மிகவும்

மதுரை மாநகரில் துவங்கப்பட்ட அதிநவீன வசதிகள் அனைத்தும் கொண்ட முதல் மருத்துவமனை. முதல்தர மருத்துவ மனை. மருத்துவச் சிகிச்சையிலும் முதல் தரம். ஏழை நோயாளிகளுக்கு உதவுவதிலும் முதலிடம். மதுரை மாநகர, மதுரை மாவட்டப் பொதுமக்கள் மனத்திலும் வடமலையான்

மருத்துவமனைக்கே முதலிடம்!



**சில ஹைலைட்ஸ்:**

* சிகிச்சை அளிப்பவர்களின் மூச்சுக் காற்று கூடப் பாதிக்காத வகையில் Guided Air Flow தியேட்டரில் நவீன இதய சிகிச்சை.

* வயிற்றைக் கிழிக்காமல் தழும்பும் இல்லாமல் குடல் நோய்களுக்கான அதி நவீன லேப்ரோஸ்கோப்பிக் சிகிச்சை.

* கிராமப்புற ஏழை மக்களுக்கு வாரம் ஒருநாள் இலவச சிகிச்சை. இலவச மருத்துவ வசதிக்கான ஆரோக்கிய வாழ்வுத் திட்டம்.

* பிரத்யேக மகப்பேறு மருத்துவ 'மை மதர் திட்டம்'.

* தென் தமிழகத்தின் தேசிய நெடுஞ்சாலைகளில் (ஏழு இடங்களில்) விபத்து அவசர ஊர்தி வசதிகளைச் செயல்படுத்திய முதல் மருத்துவமனை.

* உயிர் காக்கும் அதிநவீனக் கருவிகளுடன், அனுபவம் வாய்ந்த மருத்துவத் தொழில்நுட்பக் குழுவுடன் அவசர சிகிச்சைப் பிரிவு இயங்கி வருகிறது.

* அதிநவீன இதய சிகிச்சைப் பிரிவு, லேப்ரோஸ்கோப்பிக் சிகிச்சை மையம், சிறப்பு மகப்பேறு மருத்துவப் பிரிவு, மேலும் பல முக்கியத் துறைகளில் உயரிய மருத்துவச் சிகிச்சை. சர்வதேச அனுபவம் மிக்க மருத்துவ நிபுணர்கள்.

* மருத்துவத் துறை ஒவ்வொரு நாளும் புதிய முன்னேற்றப் பாதையில் பயணித்து வருகிறது. அதற்கேற்றாற்போல வடமலையான் மருத்துவமனையும் ஒவ்வொரு நாளும் மருத்துவ மேம்பாட்டு வசதிகளைத் தன்னகத்தே உருவாக்கி வருகிறது.


* புகழகிரி வடமலையான்

"மாமேதை டாக்டர் பி.வடமலையான் அவர்களால் 1957ம் ஆண்டு செப்டெம்பர் 15 அன்று பெருந்தலைவர் காமராஜர் அவர்கள் முன்னிலையில் துவங்கப்பட்டது வடமலையான் மருத்துவமனை. கடந்த 52 ஆண்டுகளாக மதுரை மற்றும் தென் மாவட்ட மக்களின் மருத்துவ நம்பிக்கை நட்சத்திரமாய், நலமளிக்கும் நல்லதொரு நண்பனாய் வடமலையான் மருத்துவமனை சேவை செய்து வருகிறது. தென் தமிழகத்தில் பல்நோக்கு மருத்துவமனை. நடுத்தர மற்றும் கிராமப்புற ஏழை எளிய மக்கள் கூட பயன்படுத்திக்கொள்ளும் அளவுக்கு சமூக அர்ப்பணிப்பு சேவையுள்ளம் கொண்ட மருத்துவமனை" என்கிறார் டாக்டர் புகழகிரி வடமலையான்.

மேலும் விவரங்களுக்கு:
VADAMALAYAN HOSPITALS
Multi-Speciality Centre
0452-2545400 (100 Lines)
email: enquiries@vadamalayan.org




''பெரும்பாலும் பார்வைக் குறைபாடு உள்ளவர்களை எடை மிஷின் வைத்திருப்பவர், ஊதுபத்தி விற்பவர், கடைகளுக்கு கம்ப்யூட்டர் சாம்பிராணி கொண்டு போய் தருபவர், வீதி வீதியாக பினாயில் விற்பவர் இதுபோன்ற அடையாளங்களுடன்தான் கண்டிருக்கிறோம். அதிக பட்சமாகப் போனால், ஆர்க்கெஸ்ட்ரா குழுக்களில் பார்க்கலாம். இதிலிருந்து அவர்களை உயர்ந்தபட்சமாக உயர்த்திப் பிடிக்கத் துவங்கப்பட்டதே அகவிழி பார்வையற்றோர் இல்லம்'' என்கிறார் அதன் இயக்குநர் பழனியப்பன்.

உயர்கல்வி கற்க வழி ஏற்படுத்தித் தந்து விட்டால், வேலை வாய்ப்பு மூலமாக அவர்களின் வாழ்க்கைத் தரம் உயர்ந்திடும் எனக் கனவு கண்டிருக்கிறார் பழனியப்பன். அவரது கனவு இங்கே நனவாகிக் கொண்டிருக்கிறது. ''பன்னிரண்டு வயது வரை எனக்குக் கண்பார்வை நன்றாகவே இருந்தது. என்ன காரணமோ தெரியவில்லை. படிப்படியாகப் பார்வைத் திறன் கொறைஞ்சு, முழுசாவே பார்வையில்லாமல் போச்சு. கண்ணாலம் ஆகி ஆறு வருஷம் ஆவுது. மனைவிக்குப் பார்வை தெரியும். அஞ்சு வயசுல பொம்பளப் புள்ளை இருக்கு. கே.புதூர் ஏரியாவுல எஸ்.டி.டி. பூத் வெச்சிருக்கேன். பார்வையற்றோர் நெறைய பேரு என் கடைக்கு வந்து போவாங்க. மேனிலைப் பள்ளிப் படிப்புக்கு அப்புறம், காலேஜ் படிக்க முடியாம கொஞ்சம் பேரு கஷ்டப்படுறதாக் கேள்விப்பட்டேன். அவங்களை ஒன்றிணைச்சு அவங்களுக்கு உதவ ஆரம்பிச்சது தான் இந்த 'அகவிழி பார்வையற்றோர் இல்லம்!' கடந்த நான்கு வருடங்கள்ல இதுல தங்கிப் படிச்சவங்கள்ல சில பேரு, மேனிலைப் பள்ளிகள்ல ஆசிரியர் பணியில அமர்த்தப்பட்டிருக்காங்க!'' என்கிறார்.

* ரமேஷ்



* 'அகவிழி'யின் கண்கள்



மதுரை, திருமால்புரம் (நத்தம் ரோடு) பகுதியில் உள்ளது இந்த இல்லம். இருபது ஆண்கள். ஐந்து பெண்கள். பணியாளர்கள் நான்கு பேர். தங்குமிடம், உணவு மற்றும் அவர்களுக்கான உயர்கல்விக் கட்டணங்களைச் செலுத்திப் படிக்க வைத்து வருகிறது அகவிழி. முற்றிலும் நன்கொடை பெற்றே நடத்தப்பட்டு வருகிறது.

''பெற்றோர்கள் இவங்களைக் கொண்டாந்து விட்டுட்டுப் போறதோட சரி. அப்புறமா எந்த அக்கறையும் எடுத்துக்க மாட்டாங்க. நாங்கதான், நீங்க இதுக்கு முன்னாடி என்ன படிச்சிருக்கீங்க, எங்க படிச்சீங்கன்னு துருவித் துருவிக் கேட்போம். ஒவ்வொண்ணா சேகரிப்போம். அடுத்து அவங்களோட ஆர்வம் என்னன்னு விசாரிப்போம். அதுக்கேத்த மாதிரி சேர்த்துவிடுவோம்.

இளையான்குடி, ராஜ் இங்க தங்கித்தான் எம்.ஏ. தமிழ், எம்.ஃபில். முடிச்சாரு. ஹாஸ்டல் ஃபீஸ், கல்லூரிக் கட்டணம் நாங்கதான் கட்டினோம். இப்ப அவர் ஏர்வாடி அரசு மேனிலைப் பள்ளியில ஆசிரியரா இருக்கார். அதே போல அருப்புக் கோட்டை பாலகணேஷ். குமாரபாளையம் பக்கத்துல ஒரு காலேஜ்ல பி.எட்., படிச்சாரு. அவருக்கும் ஹாஸ்டல் பீஸ், காலேஜ் பீஸ் எல்லாமே நன்கொடை வாங்கித்தான் கட்டினோம். பி.எட்., முடிச்சிட்டு, இப்ப தஞ்சாவூர்ல ஒரு தனியார் பள்ளியில ஆசிரியரா சேர்ந்திருக்காரு.

ரமேஷ், மதுரா காலேஜ்ல முதலாமாண்டு எம்.ஏ., இங்கிலீஷ் படிக்கிறார். கஷ்டமான பாடங்களை கேசட்ல ரெகார்டு பண்ணி கேட்டுக்கறாரு. எம்.ஃபில். முடிச்சிட்டு காலேஜ்ல ஆங்கிலத் துறைப் பேராசிரியரா பணிபுரியணும்ங்கறது இவரோட கனவு. இவர்களைப் போன்றவர்களின் நம்பிக்கை மையம் ஆகச் செயல்பட்டு வருகிறது அகவிழி பார்வையற்றோர் இல்லம்.

அகவிழி இன்னிசை இசைக்குழு ஒண்ணு இயங்குது. தேடி வர்ற கச்சேரிக்குப் போய்ட்டு வர்றாங்க'' என்கிறார் பழனியப்பன்.


* பழனியப்பன்


- இசைக் குழு

# அகவிழி இல்லத்தின் புறவிழி!

**மிஸ்டர் மாவட்டம்**

கலக்க வருதுப்பா

# கல்கி

கெட் ரெடி!
கெட் ரெடி!
கெட் ரெடி!

உங்க மாவட்டத்துல
'சூப்பர்' எதுங்க? 'வேஸ்ட்' எதுங்க?

- நீங்க ஜாலியா ரவுண்டடிக்கிற டூரிஸ்ட் ஸ்பாட் எதுங்கோ?
- பார்த்ததும் பரவசமா கும்பிடு போடற கோயில் எங்கெல்லாம் இருக்குங்க?
- அசத்தலா போட்டுகிட்டு அதிரடி பண்ண சேலை.ஜீன்ஸ் சுத்துவட்டாரத்துல எங்கே பெஸ்ட்டா கிடைக்கும்ங்க?
- உங்க மாவட்டத்தோட தலை போற பிரச்னை எதுங்க? எப்படித் தீர்க்கலாம்ன்னு நினைக்கறீங்க?
- மிஸ்டர் மாவட்டம் யாருங்கண்ணா? என்ன காரணமுங்க?
- கலக்கலா கதை எழுதுவீங்களா? அசத்தலா கவிதை வருமா?
- லொள்ளு பண்ற 'ஜோக்ஸ்' கைவசம் இருக்கா?

-'ஆமா'ன்னா உடனே 'கல்கி'க்குத் தட்டி விடுங்க!




# திருவாரூர், நாகைக்கு வர்றோம்...

# நீங்க ச்சும்மா கோடு போடுங்க...
# நாங்க உடனே ரோடு போடறோம்!

**ஆ**மாம்! உங்கள் மாவட்டத்துக்கு 'கல்கி' குழு, நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்?

ஆனா சில கண்டிஷன்ஸ்...

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்பு மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்).
- பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- மாவட்டத்தின்...

பிரச்னைகளுக்கு - ☑ பெட்டிஷன் பாக்ஸ்

ஆன்மிக, வியாபார, சுற்றுலா
தலங்களின் சிறப்புக்கு - ☑ நியூஸ் ஏந்தி பவன்

சிறுகதைகள், கவிதைகளுக்கு - ☑ வேடந்தாங்கல்

நகைச்சுவைக்கு - ☑ ஜோக் ஃபால்ஸ்

என்றவாறு கூப்பனில் ☑ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசி தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

**கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி : 18.4.2009**

**கலக்க வருதுப்பா கல்கி**

**திருவாரூர், நாகை மாவட்டம்**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்

☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32




**சுங்குடிச் சேலைகள் மதுரையில் மட்டுமே நெய்யப்படுகின்றன. இதே பாணியில் பக்கத்து ஊர்களில் நெய்யப்பட்டாலும் அவையும் மதுரை சுங்குடி என்றே பெயரை இரவல் வாங்கிக் கொள்கின்றன!**

* சாந்தாராம்



**650** ஆண்டுகளுக்கு முன்பாக மதுரைக்கு வந்தவர்கள் சௌராஷ்டிரர்கள். அவர்களின் பூர்வ தொழில் கை நெசவு. சுங்குடிச் சேலை தயாரிப்பு. கை கட்டு சுங்குடி, மெழுகு பிரிண்டிங் சுங்குடி, ஸ்கிரீன் பிரிண்டிங் சுங்குடி என மூன்று வகைகளில் கிடைக்கிறது.

சுங்குடிச் சேலை அணிவதில் பெண்களுக்குப் பல நன்மைகள். கோடைக் காலங்களில் உடல் வியர்வையை உறிஞ்சிவிடும் என்பதால் தோல் சம்பந்தப்பட்ட நோய்கள் வராது. உடல் குளிர்ச்சியாக இருக்கும். எல்லா காலங்களுக்கும் ஏற்றது. விலைதான் பாலியஸ்டர் மற்றும் 'சில்க்' புடைவைகளைக் காட்டிலும் சற்றுக் கூடுதல். இதிலும் இரண்டு வகை. சுமாராக சாயம் போகக்

# சுண்டி இழுக்கும் சுங்குடி!

கூடிய சுங்குடி விலை குறைவு. சாயமே போகாத சுங்குடி சற்று விலை அதிகம்.

''துவக்க காலங்களில் எட்டிக்காய் விதைகளில் சாயம் தயாரித்து, கறுப்பு மற்றும் சிகப்பு வண்ணங்களில் மட்டுமே சுங்குடிச் சேலைகள் வந்தன. ஜெர்மன், சுவிட்சர்லாந்து நாடுகளிலிருந்து சுங்குடிக்கென பல வண்ணப்பொடிகள் இறக்குமதி ஆகின. அதன் பின்னர், பல வர்ணங்களில் பல டிசைன்களில் எழில் காட்டத் துவங்கியது சுங்குடி.

"1995 வரை நல்ல மார்க்கெட். அதன் பின்னரே சரிவு. தற்போது மார்க்கெட் சுமார். இருந்த போதிலும் சுங்குடிதான் வேண்டுமென்று விரும்பி வந்து வாங்குபவர்களும் இருக்கிறார்கள். எங்கள் பரம்பரையே சுங்குடிச் சேலை தயாரிப்பில். அப்போது எங்களிடம் நூறு பேர் வேலை பார்த்தனர். தற்பொழுது எங்கள் தயாரிப்புப் பிரிவில் பத்து பேர் வேலை பார்க்கின்றனர்.

சக்கரம் சுழலும். மீண்டும் சுங்குடிக்கு நல்ல மார்க்கெட் வருமென்று நம்பிக்கையுடன் காத்திருக்கிறோம்!'' என்கிறார் மதுரை ராணி சாரீஸ் சுங்குடி உற்பத்தியாளரும், விற்பனையாளருமான சாந்தாராம்.

**"காலச்சக்கரம் சுழலும், மீண்டும் சுங்குடிக்கு நல்ல மார்க்கெட் வருமென்ற நம்பிக்கையுடன் காத்திருக்கிறோம்!"**

**நெ**ல்லை பாலு பேசுறேன். கவனமா கேட்டுக்கங்க. கல்லாலே வேலியிட்டால் கலையழகு இல்லையின்னு நெல்லாலே வேலியிட்டு நெறி வளர்த்த தாமிரபரணி நதிக்கரையோர கிராமத்தில் பிறந்தவன் நான். மதுரையில 'பாரதி யுவகேந்திரா' என்கிற அமைப்பினைத் துவங்கி பல வருடங்களாக நடத்திட்டு வர்றேன். கடந்த அஞ்சு வருஷமா



★ நெல்லை பாலு



★ இன்டர்நேஷனல் லயன்ஸ் கிளப் அவார்ட் வாங்கும்போது...

தமிழ்நாடு முழுவதும் மாவட்டவாரியாக பள்ளி மாணவ-மாணவியரைத் தேர்வு செஞ்சு அவங்களுக்கு விருதுகளும் பாராட்டுச் சான்றிதழ்களும் தந்து வருது பாரதி யுவ கேந்திரா.

ஓவியம், விளையாட்டு, படிப்பு, இசை, நடனம் என பல பிரிவுகளில் சாதனை படைப்பவர்களைப் பாராட்டி விருதுகளும், பாராட்டுச் சான்றிதழும் வழங்கி வருகிறது. எல்.கே.ஜி. முதல் ப்ளஸ் டூ வரை 'யுவ ஸ்ரீ கலாபாரதி' விருது. கல்லூரி மாணவ-மாணவியருக்கு 'சுவாமி விவேகானந்தா விருது'!

மாணவர்களுக்கான படிகள் அவர்களுக்குத் தடைகள் அல்ல என்பதே பாரதி யுவ கேந்திராவின் தாரக மந்திரம்.

**ஒ**வ்வொரு மாவட்டத்துலயும் ஓடிப் போய் விழா எடுத்து இதை ஏன் நான் செஞ்சு வர்றேன்னா... இதுல என்னோட பால்ய கால சம்பவம் ஒண்ணு ஒளிஞ்சிருக்கு.

கிராமத்துப் பாட்டி வீடு. ரெண்டாவது படிக்கிறப்ப பாரதி பேச்சுப் போட்டியில எனக்குத்தான் முதல் பரிசு. சோப்பு டப்பா தந்தாங்க. வீட்டுக்கு வந்தேன். காந்திமதி பாட்டியிடம் காமிச்சேன். அதை எடுத்துக்கிட்டு ஒவ்வொரு வீடாப் போயி, 'என் பேரன் பரிசு வாங்கிட்டு வந்திருக்கான்'னு சொல்லப் போனவங்க வீடு திரும்ப ரெண்டு மணி நேரம் ஆச்சு!

அந்தச் சோப்பு டப்பா பரிசுதான் நான் பல போட்டிகள்ல தொடர்ந்து பங்கேற்க ஊக்கமா இருந்தது. என்னோட ரெண்டாம் வகுப்புலேர்ந்து எம்.ஏ.(தமிழ்) வரைக்குமாக 466 பரிசுகள் வாங்கிக் குவிச்சிருக்கேன். ஒரு பேச்சுப் போட்டியில முதல் பரிசுக்காக 1982ல் ஜனாதிபதி கையால தங்கப்பதக்கம் வாங்கியிருக்கேன்.

**செ**ன்னை, தி.நகர், பசும்பொன் தேவர் திருமண மண்டபம். அரங்கம் நிரம்பி வழியுது. குழந்தைகளும், மாணவ-மாணவிகளும் பெற்றோர்களுமாய் குதூகலத்துடன் கூடியுள்ளனர். நிகழ்ச்சி நிரலின்படி விழா



★ பாராட்டு விழாவில் 'சோ'...

# பாராட்டுங்கள்; படிகள் தடைகள் அல்ல!

நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. செட்டிநாடு வித்யாஸ்ரம் பள்ளி மாணவி சுசித்ரா ஆனந்த் என்கிற பெயர் மைக் மூலமாக உச்சரிக்கப்படுகிறது.

அந்த மாணவியை அழைத்துக் கொண்டு மேடையேறியவரைக் கண்டு, அரங்கில் அத்தனை பேருக்கும் இன்ப அதிர்ச்சி! அந்த ஆச்சர்ய மனிதர்தான் துக்ளக் ஆசிரியர் சோ. சுசித்ரா ஆனந்த் என்கிற மாணவியின் தாத்தா.

''மகாகவி பாரதி பெயர்ல பள்ளிப் பிள்ளைகளுக்கு விருதுகளும், பாராட்டுச் சான்றிதழ்களும் தர்றதா கேள்விப்பட்டேன். அது என்னோட பேத்திக்கும் கிடைக்கறதா சொன்னாங்க. அதான் அவளின் அம்மாவோட சேர்ந்து நானும் இந்த விழாவுக்கு வந்துட்டேன். எத்தனையோ பாராட்டு விழாக்களைப் பார்த்திருக்கேன். இது போன்றதொரு பாராட்டு விழாவை இன்னைக்குதான் பார்க்கிறேன். இந்த விருதுகளும், பாராட்டுச் சான்றிதழ்களும் பள்ளி மாணவ-மாணவிகளுக்கு நெறைய தன்னம்பிக்கை தரும்!''னு மேடையில பேசிட்டு சட்டுனு கீழே இறங்கிட்டார் சோ.

எல்லோர்க்கும் மனநிறைவு!

தொடர்புக்கு:
செல் : 9443930815,
9442630815

**யுவஸ்ரீ கலா பாரதி விருதுக்கு தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரியில் உள்ள அனைத்து மாணவ மாணவியர்கள் தங்கள் தகுதி குறிப்பிட்டு ரூ.10 அஞ்சல் தலை ஒட்டப்பட்ட சுயவிலாசமிட்ட கவருடன் விண்ணப்பிக்கலாம்.**

**அழகர்கோயிலில் வீற்றிருக்கும் கள்ளழகர் தங்கத்தால் ஆனவர். பூலோகத் தங்கம் அல்ல; தேவலோகத் தங்கம். அபரஞ்சி தங்கம். இதுபோன்று இரண்டு இடங்களில் உள்ளன. ஒன்று, மதுரை அழகர்கோயில்; இன்னொன்று, திருவனந்தபுரம் பத்மனாபா கோயிலில்.**

பலநூறு ஆண்டுகளுக்கு முன்னர், கேரள ராஜாவுக்கு ஓர் ஆசை. அபரஞ்சி தங்கத்தாலான கள்ளழகரைக் கடத்தி வந்து விட்டால் என்ன? செயலில் இறங்குகிறார். சித்து வேலைகளில் கை தேர்ந்த பதினெட்டு மந்திரவாதிகளை அழகர் கோயிலுக்கு அனுப்பி வைக்கிறார். மை வலிமையால் தங்களை அருபமாக மாற்றிக்கொண்டு மறைந்து திரிகின்றனர் அழகர்கோயில் மலையில். கள்ளழகரின் சக்தியை ஆவாஹனம் செய்கின்றனர். தெய்வ வலிமையைக் குறைத்துவிட்டு, அபரஞ்சி தங்கத்தால் ஆன கள்ளழகரைக் கடத்திச் சென்று, தங்கள் இருப்பிடத்தில் வைத்து மீண்டும் சக்தியை உரு ஏற்றிக்கொள்ளலாம் என்பது அந்தப் பதினெட்டு சித்தர்களின் திட்டம்.

கோயில் அர்ச்சகர்கள் இதனை உணர்ந்து கொள்கின்றனர். பதினெட்டு மந்திரவாதிகளைப் பிடித்துவிட முயற்சிக்கிறார்கள்; முடியவில்லை. மாற்று மை மூலமாக ஏவிவிடுகிறார்கள். பலி பீடங்களில் அவர்களது உருவங்கள் வெளிப்படுகின்றன. தங்கள் தவறை உணர்கிறார்கள். அழகர்மலையில் அடைக்கலம் ஆகிவிட எண்ணுகிறார்கள். கேரளா சென்றால் மன்னன் தங்களை சிரச்சேதம் செய்து விடுவான் என அஞ்சுகின்றனர். அதற்கு கள்ளழகர்



# கள்ளழகரைக் காத்த கருப்பண்ணர்கள்!




திருவடியில் மரணம் எய்து வதே மேல் எனவும், தங் களைப் போல யாரேனும் எதிர்காலத்தில் தீங்கு செய்ய இங்கு வந்தால், அவர்களைத் தடுத்து நிறுத்தித் திருப்பி அனுப்புவதே தங்களது தலையாய கடமை என்றும் முடிவுக்கு வருகின்றனர்.

கோபுர வாசலின் பதினெட்டு படிகளில் அமர்ந்து பிராணத் தியாகம் செய்கின்றனர். பதினெட்டு படிகளில் உறைந்து போகின் றனர். இதுவே பதினெட்டாம் படி கருப் பண்ண சுவாமி. அவருக்கு உருவம் இல்லை. பதினெட்டு படிகளும், மிக நீளமான வெட்டரிவாளுமே கருப்பண்ண சுவாமியாகத் தரிசிக் கப்படுகின்றன. அதன் சன்னிதி யில் பெரிய கதவு. அதற்கு ஆடி அமாவாசை, பௌர்ணமி ஆகிய இரு தினங்களில் மட்டும் சந் தனக்காப்பு. ஆடி பிரமோற்சவம் ஒன்பது நாளில் மட்டும் சக்கரத்தாழ்வார் வெளிக் கிளம்பும் போதும், உள்ளே நுழையும் போதும் ஒரு பத்து நிமிடம் மட்டுமே கருப்பண்ண சுவாமி சன்னிதியின் பெரிய கதவுகள் திறக்கப்படும். வருடத்தில் மற்ற எந்த நாட்களிலும் அந்தக் கதவு திறக்கப் படுவதில்லை.

# "ஜாதிக் குப்பிக்குள் படைப்பாளிகள் முடங்கக்கூடாது!"

**- கவிஞர் தேவேந்திரபூபதி பேட்டி**

**"கவிதையிலிருந்து ஒரு வார்த்தையை உருவினால்கூட மற்ற வார்த்தைகள் பொலபொலவென்று கொட்டிவிடும் அளவுக்கு கவிதையில் அர்த்தச் செறிவுள்ள கட்டுமானம் தேவை. ஒரு வார்த்தையை நோக்கி இயங்குகிற கவிதையில்தான் கலைத்தன்மை நிரம்பியிருக்கும். உதாரணமாக புத்தம் சரணம் கச்சாமி என்ற மூன்று வார்த்தைகளில் புத்த மதத்தின் அனைத்துத் தத்துவங்களும் அடங்கிவிடுதல் போல"- என்கிறார் கவிஞர் தேவேந்திரபூபதி. நவீனக் கவிதையில் கனமான கவனத்தைப் பெற்றிருக்கும் இவர், தற்போது மதுரை வணிக வரித்துறையின் துணை ஆணையர். 2008ல் 'அந்தரமீன்' என்ற மூன்றாவது கவிதைத் தொகுப்பை வெளியிட்டிருக்கிறார். 'கடவு' என்ற இலக்கிய அமைப்பின் மூலம் இலக்கிய நிகழ்வுகளை அரங்கேற்றி வருகிறார். அவருடனான சந்திப்பிலிருந்து சில துளிகள்...**

***இலக்கிய ஆர்வம் வந்தது எப்படி?***

''என் அப்பா மூன்று வயதிலேயே என்னை தேவாரம், திருப்புகழ் வகுப்புகளுக்கு அனுப்பினார். குழந்தை, தன் இடுப்பில் இருக்கும் தங்கக் கொடியின் மதிப்பு தெரியாமலே அணிந்திருப்பது போல, அவற்றின் அர்த்தம் தெரியாமலே மனப்பாடம் செய்வதும் எழுதிப் பார்ப்பதுமாகக் கழிந்தது என் பால்யம். விவரம் தெரிந்து அவற்றை வாசிக்கும்போது, என் அப்பாவை மனத்தால் தொழுதேன். சாண்டில்யன் எழுத்துகளையும், வைரமுத்துவின் 'இன்னொரு தேசிய கீதம்...' போன்ற படைப்புகளையும் விரும்பி வாசித்து வந்த எனக்கு, பன்னிரண்டாம் வகுப்பு விடுமுறையில் அறிமுகமான சுந்தர ராமசாமியின் 'புளிய மரத்தின் கதை', ராகுல்ஜியின் 'வால்காவிலிருந்து கங்கை வரை', 'ஊர் சுற்றிப் புராணம்', மகாதேவ் தேசாய் முன்னுரையோடு வந்த பகவத் கீதை மற்றும் காந்திஜியின் நூல் வரிசைகள், கல்யாண்ஜி, கலாப்ரியா படைப்புகள். 'அபியின் என்ற ஒரு', 'அந்தர நடை'... போன்றவைதான் என்னை நவீன இலக்கியம் நோக்கி நகர்த்தின.''




***நவீன இலக்கியவாதிகளுக்கு இடையே தனித்தனி குழுக்கள் ஏன்?***

''நல்ல இலக்கியத்துக்கான அடையாளமே பல குழுக்கள் இயங்குவதுதான். ஒரு குழு என்பது அதிகாரத்தின் அடையாளம். அது ஒரே இடத்தில் குவியாமல் பரவலாக்கப்பட்டிருப்பது ஆரோக்கியம்தானே. இவர்களில் ஹைக்கூவில் இயங்குபவர்கள் ஒரு கட்சி ஆரம்பிக்

கும் அளவுக்கு இருக்கிறார்கள். ஆனால், தமிழில் இன்னும் ஒரு ஹைக்கூ கூட எழுதப்படவில்லை. ஹைக்கூ, ஞானத்தின் வடிவம். நினைத்த நேரத்தில் எல்லாம் ஞானம் கிடைத்துவிடாது. ஒரு சிப்பிக்குள் சுண்ணாம்பு, உப்பு, திரவம்... போன்ற பொருட்கள் ஒன்று சேர்ந்து மெல்ல மெல்ல முத்தாக தகவமைப்புப் பெறுவது போல, அனுபவத் திரட்டுகளின் அரிய கண்டுபிடிப்புதான் ஹைக்கூ. இங்கு முத்துக்களைப் பற்றிக் கவலைப்படாமல் கிளிஞ்சல்களுக்கு அறிவு முலாம் பூசி விடுகிறார்கள்.''

**நவீன இலக்கியவாதிகள் மக்கள் பிரச்னைக்காகப் போராடுவதில்லையே?**

''ஒரு படைப்பு என்பதே போராட்டம் தான். படைப்பாளி நினைத்தவுடன் எழுதிக் குவித்து விடுவதில்லை. அந்தப் படைப்புக்கான மனநிலையோடே எட்டு பத்து வருடங்கள் வாழ்ந்துதான் வெளிக் கொண்டு வருகிறான். படைப்பாளியின் வேலை, பிரச்னைகளைப் புரியவைப்பது தான். புரிந்து கொள்வதும் போராடுவதும் மக்களின் வேலை. நவீன இலக்கியவாதிகள் பலருக்கு மீடியா வெளிச்சம் என்றாலே ஒவ்வாமைதான். அதனால் அவர்களுடைய பல செயல்பாடுகள் வெளிச்சத்துக்கு வருவதில்லை.''

**கவிதைகளில் பெண் மொழி ஆபாசமா... அவசியமா?**

''கவிதையில் ஆபாசம் என்ற ஒன்று கிடையாது. கவிதையாய்ச் சொல்லப்படுகிற மொழியில் ஆபாசம் துருத்திக் கொண்டு தெரியாது. தேர்ந்த கலைஞனுக்கு ஒப்பானவன் கவிஞன். அவன் செதுக்கும்



**"படைப்பாளிகளை ஜாதிக் குப்பிக்குள் அடைக்கிற பாமரத்தனம் தமிழகத்தில்தான் அதிகம்!"**

போது எந்தப் பிசிறும் தட்டாமல் சிற்பம் உருவாவது போலத்தான் கவிதை உருவாக வேண்டும். கவிதையைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு ஒரு சொல் மட்டும் துருத்திக் கொண்டு தெரிந்தால் அதைக் கவிதையாக ஒப்புக் கொள்ள முடியாது. நவபாஷாணங் கள்தானே மருந்தாகப் பயன்படுகின்றன. அவற்றைத் தனித்தனியாகப் பிரித்துப் பார்த்தால் விஷம். கலந்து பயன்படுத்தி னால் மருந்து. வெள்ளிவீதியார், ஔவையார், ஆண்டாள்... அளவுக்குக்கூட இங்கே யாரும் பெண்மொழியில் இயங்கவில்லை.''



* மனைவி மற்றும் குழந்தையுடன்...

**ப**டைப்பாளிகள் ஜாதி ரீதியாக இயங்கலாமா?

''படைப்பும், படைப் பாளியும் பொதுவானவர்கள். எந்தக் கட்டுக்குள்ளும் இயங்கக் கூடாது! படைப்பாளிகளை ஜாதிக் குப்பிக்குள் அடைக்கிற பாமரத் தனம் தமிழகத்தில்தான் அதிகம். ஜாதி ரீதியாக இயங்கும் படைப்பாளிகளால் படைப்புக்கு எப்படி உண்மையாக இருக்க முடியும்? சிலரின் சுயநலத்துக்கு படைப் பாளிகள் பகடைக்காயாக மாறிவிடக் கூடாது. நான் இப்பவும் மதிக்கிற கவிஞர் பழமலய் போன்றவர்கள்கூட ஜாதி ரீதியாக இயங்குவதில் என்னைப் போன்றவர் களுக்கு இலக்கிய வருத்தம் அதிகம்.''

> **“ஹைக்கூ என்பது ‘முத்து’ மாதிரி! இங்கே முத்தை விட்டுவிட்டு கிளிஞ்சல்களுக்கு அறிவுமுலாம் பூசிவிடுகிறார்கள்!”**

**நீ**ங்கள் நடத்திக்கொண்டிருக்கும் ‘கடவு’ அமைப்பு பற்றிச் சொல்லுங்கள்?

''திருநெல்வேலி மற்றும் பாளையங் கோட்டை வணிகவரி அலுவலராக இருந்த போதுதான் கடவு இலக்கிய அமைப்பை ஆரம்பித்தேன். இலக்கியச் சந்திப்புகளை ஏற்படுத்துவதன் மூலம் உரையாடல்களைத் துவக்குவதும், அதன் மூலம் இலக்கியத்தை இன்னொரு தளத்துக்குக் கொண்டு செல்வதும்தான் கடவு அமைப்பின் நோக்கம். எஸ்.ராமகிருஷ்ணனின் அரவான் நாடகத்தை அரங்கேற்றினோம். 2003ம் ஆண்டு நாங்கள் ஏற்பாடு செய்திருந்த ‘புது யுகத்தில் தமிழ் நாவல்கள்’ என்ற கருத்தரங்கில்தான் முதுபெரும் எழுத் தாளர் சுந்தர ராமசாமி கடைசியாகக் கலந்து கொண்டார். மு.அருணாசலம் பிள்ளை யின் ‘தமிழ் இலக்கிய வரலாறு’ என்ற நூலைப் பதிப்பிப்பதற்கு உதவி னோம். இப்போது தமிழ் இசை இலக்கண வரலாறு, உ.ல.பாலசுப்ரமணியன் மேற்பார்வையில் பதிப்பிக் கும் பணிகள் நடைபெற்று வருகின்றன. மாற்றுத் திரைப்படங்களை முன்னெடுத்துச் செல்லும் திட்டமும் இருக்கிறது. எதிர்காலத்தில் நவீனம், செவ்வியல் என்ற பாகுபாடில் லாமல் தமிழுக்கு எவை தேவையாக இருக்கின்றனவோ அவற்றைப் பதிப்பிக் கும் பணிகளில் கடவு கவனம் செலுத் தும்!''



மாணவிகளுடன் கவிதா மகேந்திரன்

**சம்மர் கோர்ஸ்**

# கிரியேட்டிவ் மியூஸிக் காலேஜ்!

**ஒ**ரே இடத்தில் எல்லா கலைகளுக்கும் தனித்தனியே வகுப்புகள், பயிற்சிகள். இதுதான் **மகால் 5வது தெரு, மதுரையில் இயங்கி வரும் 'கிரியேட்டிவ் மியூசிக் காலேஜ்'ன்** தனிச்சிறப்பு.

* அபாகஸ்: சைனீஸ் மெதட் மேத்ஸ். ஏழு வயதிலிருந்து பதிமூன்று வயது. * ஹேரன்ட் ரைட்டிங்: சிறந்த கையெழுத்துப் பயிற்சி. முப்பது நாட்களில் முத்துமுத்தான கையெழுத்துக்கு கியாரண்டி. * வேத கணிதம்: பதினான்கு வயதிலிருந்து எந்த வயதாக இருந்தாலும் ஓ.கே. * செஸ்: ஏழு வயதிலிருந்து, எந்த வயதாக இருந்தாலும் ஓ.கே. * ஓவியம்: நாலரை வயதிலிருந்து * பெயிண்டிங்: ஸ்பெஷல் கேன்வாஸ் பெயிண்டிங் * கீபோர்டு, கிடார், வயலின், வீணை, மிருதங்கம், தபேலா, டிரம்ஸ், வாய்ப்பாட்டு. * பரதம், நாட்டுப்புற நடனம், மேற்கத்திய நடனம்.

"**எ**ங்கள் 'கிரியேட்டிவ் மியூசிக் காலேஜ்'ல் சகல கலைகளும் சிறந்த ஆசிரியர்களால் பயிற்றுவிக்கப்படுகின்றது. நான்கு தளங்களில் இயங்குகின்றன பயிற்சி வகுப்புகள். ஒவ்வொரு வகுப்பிலும் Closed Circuit Camera பொருத்தப் பட்டுள்ளது. காலை நேர வகுப்புகளில் சங்கீதம், நடனம் ஆகிய பிரிவுகளுக்கும், மாலை நேர வகுப்புகளில் கலை, கணித வகுப்புகளும் நடத்தப்படுகின்றன.

ஒவ்வொரு வருடமும் சம்மர் கோர்ஸ் மிகச் சிறப்பு வாய்ந்தது. ஏப்ரல் மாதம் இருபது நாட்கள், மே மாதம் இருபது நாட்கள், வாருங்கள்... வந்து சேருங்கள்!" என அழைப்பு விடுக்கிறார் தாளாளர் கவிதா மகேந்திரன்.

மேலும் விவரங்களுக்கு:

**0452-4370701; 97866 90986**
**97887 26195**



அப்பத்தான் கறந்து வந்த பசும்பாலை அடுப்பில் ஏற்றி நிழல் போல தீயில் கண்டக் காய்ச்ச வேண்டியது. கூடவே அல்காவை அளவாச் சேர்க்க வேண்டியது. கைப்பக்குவத்துல மணக்கற இந்த பாஸந்தியில கரைய வைச்ச பாதாம் பிசினை கச்சிதமாக சேர்க்க வேண்டியது. இந்தக் கலவையே தேவாமிர்தம்தான்! அதை ஒரு கிளாஸில் முக்கால் பங்குக்கு நிரப்பி, வெண்ணெய் மாதிரி ஒரு உருண்டை ஐஸ்கிரீமை மிதக்கவிட்டு, ஒரு ஸ்பூன் நன்னாரி சர்பத்தை சும்மா சுழற்றி ஊத்தி, ஐஸ் தூளைத் தூவி மேலும் 'சில்'லாக்கி, ஒரு ஸ்பூனையும் போட்டு கையில் கொடுத்துவிடுகிறார்கள். ஒரு ஸ்மால் ஸ்பூன் நுனியில் சுவர்க்கத்தைச் சுவைக்க முடியுமானால் அது மதுரை ஜிகர்தண்டாவைச் சாப்பிடும்போதுதான்!




# ஸ்பூன் நுனியில் சொர்க்கம்!

இடுபொருள்களில் எது ஒன்றையும் அதிகமாகவோ, குறைத்தோ, பதம் தவறாகவோ கலந்துவிட்டால் ஜிகர்தண்டா 'நோ முகர்தண்டா' வாக மாறி முகம்சுளிக்க வைத்துவிடும். அதனால் ரொம்பக் கவனமாகத் தயாரிக்கணும். கம்பி மேல நடக்கிற மாதிரி'' என்கிறார் அதன் தயாரிப்பாளர்களில் ஒருவர்.

''அப்படித்தான் ஒரு முறை முன்னூறு லிட்டர் பால் காய்ச்சினப்ப, தீய்ஞ்சு போச்சு. அவ்வளவையும் கொட்டிட்டோம். பதமும், ருசியும்தான் எங்களுக்கு முக்கியம்!'' என்கிறார் அதன் உரிமையாளர் ஜிந்தா மதார்.

மதுரையில் இரண்டு இடங்களில் இதன் கடைகள் இயங்கி வருகின்றன. கீழமாரட் வீதியில் தலைமையகம். அண்ணா நகரில் ஒரு கிளை. மதுரை வரும் சினிமாக்காரர்களுக்கு ரொம்ப ஃபேவரிட் இந்த ஜிகர்தண்டா. ஐம்பது ஆண்டுகளாக இதனைச் செய்து வருகிறது ஒரு குடும்பம். அதன் சகோதரர்கள், குடும்ப உறுப்பினர்கள் என அனைவருமே ஒன்றிணைந்து இத்தொழிலில் ஈடுபட்டு வருகின்றனர்.

''ஜிகர் என்றால் இதயம். தண்டா என்றால் குளிர்ச்சி. இதயத்துக்குக் குளிர்ச்சி தரும் பானம் ஜிகர்தண்டா. கடை ஒரு நாள் லீவு விட்டால் கூட, வாடிக்கையாளர்கள் மறுநாள் வந்து நேத்து ஏன் லீவு விட்டீங்கனு கேட்டுட்டுப் போவாங்க. மதுரையில் தினசரி ஜிகர்தண்டா ருசிக்கும் ரசிகர்கள் அதிகம். ஏ.ஆர். ரஹ்மான் மதுரை வந்தா ஜிகர்தண்டா சாப்பிடாமப் போகமாட்டார்! விரைவில் சென்னைக்காரர்களையும் குளிர்விக்க வரவிருக்கிறோம். தி.நகர் ரெங்கநாதன் தெருவில் ஜிகர்தண்டாவை ருசிக்கலாம்!'' என்கிறார் ஜிந்தா மதார்.



**உறங்கா நகரம்னு மதுரைக்கு ஒரு பேரு உண்டு. மதுரை மாவட்டத்திலே கண் உறங்கா கிராமம் ஒண்ணு இருக்குங்க. மதுரையிலேருந்து பதினைஞ்சு கி.மீ. தூரம். வலையங்குளம் கிராமம். இந்த ஊருக்குக் 'கூத்தாடி வலையங்குளம்'னு பேரும் உண்டு.**

# நாடகக் காணிக்கை!

ஊருக்குள்ளாற சுயம்பா தோன்றிய தனிலிங்கப் பெருமாள் கோயில் கொண்டிருக்கார். சுத்து வட்டாரத்துக்குப் பெரிய கோயில். குடிபடைங்க ஜாஸ்தி. ஆம்பளைங்க மட்டும்தான் உள்ளாற போயி சாமி கும்பிடலாம். பொம்பளைங்க கோயிலோட முதல் வாசலுக்கு வெளியே நின்னுதான் சாமி கும்பிடணும்.

அக்கம்பக்கத்துல நூத்தைம்பது கிராமத்துக்கும் தனிலிங்கப் பெருமாள்தான், வேண்டிக்கிட்டதை நிறைவேத்தி வைக்கிற தெய்வம். ஒரு காரியம் நிறைவேறிட்டா, அந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவங்க கோயிலுக்கு முன்னாடி 'நாடகம்' நடத்தித் தர்றதுதான் சாமிக்குச் செய்யற காணிக்கை. அந்த ஒரு நாள் நாடகத்துக்கு உண்டான மொத்தச் செலவும் அந்தக் குடும்பத்தோடது.



பூசாரி கண்ணன்



''கோயிலுக்கு உள்ளே இருக்கற பெருமாளுக்கு நாடகம் கேட்டுக்கிட்டே இருக்கணும். அவ்ளோ நாடகப் பிரியர். அவரே கூத்தாடியும் கூட. மாசி மகா சிவராத்திரி அன்னைக்கு மொதல் நாடகம் கிராமத்து சார்பா போடுவாங்க. கோயில் மந்தையில நாடகம் நடக்கும். நைட்டு பத்து மணிக்குக் கட்டினா, விடியவிடிய நாடகம் போய்ட்டே இருக்கும். நாடகம் முழுசா முடியும்போது விடிஞ்சிடும். இப்படி தினசரி இரவு நாடகம் தொடர்ந்து போடுவாங்க. ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வேண்டுதல்காரங்க நாடகம் போடப் பணம் கட்டியிருப்பாங்க. மகா சிவராத்திரி அன்னைக்கு ஆரம்பிக்கிற நாடகம், ஒவ்வொரு நாளைக்கும் வெவ்வேறு நாடகம்னு தொடர்ந்து அம்பது அறுபது நாளைக்கு நடந்துக்கிட்டே இருக்கும். இந்த வருஷம் நாப்பத்தைந்து நாளைக்கு தொடர்ந்து நாடகம் புக் ஆகியிருக்கு. அந்த ஒவ்வொரு நாள் நைட்டும் எங்க கிராமம் தூங்காம முழிச்சுக்கிட்டு இருக்கும்!'' என்கிறார் கோயில் பூசாரி கண்ணன்.



நாம் கொண்டு சென்ற காமிராவைப் பார்த்ததும் உள்ளூர்ச் சிறுவர்கள் சூழ்ந்து கொண்டனர். ''சார்... சார்... எங்களை ஃபோட்டோ பிடிச்சுப் பத்திரிகையில போடுங்க. நாங்கதான் எதிர்கால மாடுபிடி வீரர்கள். எங்களை யாருமே கண்டுக்கறது இல்ல சார்!'' எனக் கெஞ்சுகின்றனர். மீசை கூட அரும்பவில்லை. ஆனால் அவர்கள் மனசுக்குள்ளே, மாடுபிடி ஆசையை விதைத்து வைத்துள்ளது அலங்காநல்லூர்.

நம்மைச் சூழ்ந்துகொண்ட அஜித், விஜய், விக்ரம் என்ற அந்தச் சிறுவர்களைக் கடந்து, அலங்காநல்லூர் தெருக்களில் நுழைந்தோம்.

நேரில் எதிர்ப்பட்ட ராமன், ''இப்ப நான் உங்ககிட்ட ரொம்பச் சிரமப்பட்டுத்தான் பேசிட்டு இருக்கேன். என்னோட குரல்வளை என்கிட்டே இல்ல! மூணு வருஷம் முன்னால, பக்கத்து ஊர் கல்லணையில ஜல்லிக்கட்டு. மாடு அடக்கப் போயிருந்தேன். என்னோட குரல்வளைச் சங்குல குத்தி மாட்டுக் கொம்பு வெளிப் பக்கம் வந்திடுச்சு. நான் உயிர் பொழைச்சதே பேரதிசயம்! மதுரை ஜி.ஹெச்.ல மூணு மாசம் படுத்துக் கிடந்தேன். அந்த மூணு மாசமும் எனக்குச் சாப்பாடே கிடையாது. தொண்ணூறு நாளும் குளுக்கோஸ் வாட்டர்தான். ஆபரேஷன் ஆனது. ஆஸ்பத்திரிலேர்ந்து வீட்டுக்கு வந்தேன். சுத்தமா பேசவே வரலை. எல்லாரும் பயந்துட்டாங்க. எனக்கே வேதனையாய்ப் போச்சு. அடிவயித்துலேர்ந்து பேச முயற்சிப்பேன். காத்துதான் வெளியே வரும். இப்பத்தான் கொஞ்சம் கொஞ்சமா பேச வருது. தேவைப்பட்டா மட்டும் பேசிட்டு இருக்கேன்!'' என்கிறார்.

# அலைக்கழிக்கும் அலங்காநல்லூர்!




✱ ராமன்

இந்த விவரங்களை அவர் நம்மிடம் இடைவெளி விட்டு விட்டுச் சொல்லி முடிக்கவே பதினைந்து நிமிடங்கள் ஆயிற்று!

''ரெண்டு வருஷமா மாடு அடக்கப் போறதில்ல நானு'' எனக்கூறும் சின்ன அவயன் அதற்கான காரணத்தையும் சொன்னார். ''எல்லாம் ஒரு பாதுகாப்புக்குத்தான். எளந்தாரியா திரிஞ்சப்ப மாடு பிடிக்கப் போய்ட்டிருந்தேன். கண்ணாலம் ஆகி புள்ளை குட்டிகள் ஆயிடுச்சு. எதுனா ஒண்ணுன்னா... நாளைக்கு அதுங்களுக்கு கஞ்சி ஊத்துறது யாரு? நானும் பத்து வருஷமா மாடு பிடிச்சிட்டு இருந்தேன். இப்பத்தான் ரெண்டு வருஷமா போறதில்ல. நான் போவாட்டி என்னா? என் வயசுக்குப் பின்னால எளந்தாரி பையன்ங்க மாடுபிடி களத்துக்கு வந்துடுவாங்க. அந்த எடம் ஒண்ணும் காலியா இருக்காது!'' எனக் கறாராகச் சொல்கிறார் சின்ன அவயன்.


* நடிகர் கமலுடன் செந்தில்குமார்

உயிர்ப் பலிகளுக்கு உலை வைக்கும் இதுபோன்ற ஜல்லிக்கட்டு தேவைதானா? ''இன்னைக்கு எதுல உயிர்ப்பலி இல்லே. உங்க டவுன்ல காலைல ரோட்டோரமா வாக்கிங் போய்ட்டு இருக்கான். தண்ணி லாரி அவன் மேல ஏறி, அந்த எடத்துலயே அந்தாளு செத்துப் போயிடறான். இதுக்காக உங்க டவுன்ல வாக்கிங் போவாம இருக்கீங்களா? இல்லே... தண்ணி லாரிய ஊருக்குள்ளே ஒட்ட வுடாம தடுத்துட்டீங்களா?'' எதிர்க்கேள்விகள் நிறையக் கேட்டு வைக்கிறார் சின்ன அவயன்.


* விஜய், அஜித், விக்ரம்

விருமாண்டி திரைப்படத்தில் காளைகளை அடக்கும் காட்சிகளில் நடிகர் கமலஹாசனுடன் துணை நின்று நடித்த இளைஞர், செந்தில்குமார்.




**'' ஜல்லிக்கட்டை எங்களால விட்டுட முடியாது. ரத்தத்துல கலந்தது அந்த உணர்வு. ''**

**கலாசாரமா?**
**காட்டுமிராண்டித்தனமா?**

"உலகின் ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொருவிதமான வீர விளையாட்டு நடைபெற்றுக் கொண்டுதான் இருக்கிறது. ஜல்லிக்கட்டு, தமிழர்களின் வீர விளையாட்டு. பழந்தமிழர்களின் வாழ்வில் வேரூன்றிய கலாசாரம். மதச்சடங்கின் ஒரு பகுதி. ஜனநாயக அரசாங்கம் இதில் கை வைக்கக் கூடாது!" எனக் கூறுகிறார் ஆய்வாளரும், பேராசிரியருமான தொ.பரமசிவம்.

"சுற்றுலா மற்றும் அந்தந்த ஊர் வணிக லாபம் போன்றவற்றை மறைமுகமாக உள்ளடக்கியது தமிழக ஜல்லிக்கட்டு. வேடிக்கை பார்ப்பவர்களுக்குப் படுகாயம், மனித உயிர்ப்பலிகள் என்பது வெளிப்படை. இதை ஏன் நமது சமூகநல அமைப்புகளும், நமது அரசாங்கமும் சிந்திக்க மறுக்கின்றன என்பதுதான் எனது கேள்வி. பணக்காரர்கள் எவரும் மாடுபிடி களத்தில் நிற்பதில்லை. மாறாக, அடித்தட்டு வாழ்வில் உழலும் சாதாரண எளிய மனிதர்களே மாடுபிடிக்கப் போய் மாண்டு விடுகிறார்கள். ஒரு மிருகத்தை ஒரு மனிதன் அடக்கி ஆள்வதா வீரம்? ஜல்லிக்கட்டு என்பது கடைந்தெடுத்த காட்டுமிராண்டித்தனம்' காட்டமாகக் கூறுகிறார் கட்டுரையாளர் ஜெயபாஸ்கரன்.



* ஜெயபாஸ்கரன்



* தொ. பரமசிவம்

**"பழந்தமிழர்களின் கலாசாரம்"**

அலங்காநல்லூர் ஜல்லிக்கட்டில் அவர் இறந்து போய் நான்கு வருடங்கள் ஆகின்றன. கல்யாணம் ஆகவில்லை. "அந்தப் பாதரவை என்கிட்ட ஏன் கேக்குறீக?"னு சொல்லிவிட்டு கசியும் கண்ணீர்த் துளிகளுடன் எழுந்து உள்ளே சென்று விட்டார் செந்தில்குமாரின் பாட்டி.

"என்னோட கொளுந்தனார்தான். எங்க வீட்டைப் பொறுத்த வரைக்கும், எங்க குடும்பத்துல ஒரு ஆளு, மேலே போய்ச் சேர்ந்துட்டாரு. நல்லா வாழ வேண்டிய வயசுல எங்க வீட்டாளு ஒருத்தரைச் சாகக் கொடுத்துட்டு நிக்கறோம்!" என்கிறார் சரஸ்வதி.



* சரஸ்வதி

**"கடைந்தெடுத்த காட்டுமிராண்டித்தனம்"**

"இது இந்த ஊரோட பெருமை. எங்க மண்ணோட மாண்பு. ஜல்லிக்கட்டை நாங்க விட்டுடவே முடியாது. எங்க ஊரு சனங்களோட ரத்தத்துல கலந்தது அந்த உணர்வு. மத்த ஊர்கள்ல மாறுமோ மாறாதோ தெரியாது. அலங்காநல்லூர்ல ஜல்லிக்கட்டு எந்த வருஷமும் மாறாது. தை மாசம் மூணாம் தேதி அலங்காநல்லூர் ஜல்லிக்கட்டு. இதுல எந்த மாற்றமும் இதுவரைக்கும் நடந்தது கிடையாது. சுப்ரீம் கோர்ட், ஹைகோர்ட் நிபந்தனைகளின்படி, கடந்த மூணு வருஷமா இங்கே ஜல்லிக்கட்டு நடந்து வருது. இது எங்களுக்கு உணர்வு சார்ந்த விஷயம். அறிவுசார்ந்த விஷயம் அல்ல!" எனக் கூறுகிறார் அலங்காநல்லூர் பேரூராட்சி மன்றத் தலைவி அழகு உமாதேவி பெரியசாமி.

# ஜெயலலிதா எவுகணைகள்!

சில மாதங்களுக்கு முன்னர் ஜெயலலிதா, தமது கட்சிக்காரர்களிடம், ஆளும் கட்சியின் ஊழல்கள், ஆளும்கட்சிப் பிரமுகர்களின் அராஜகங்கள், தில்லுமுல்லுகள் ஆகியவற்றைக் குறித்து தமக்கு விலாவரியாக எழுதச் சொல்லியிருந்தார். உடனடியாக ஆயிரக்கணக்கான கடிதங்கள் ஜெ.வுக்கு வந்தன. ஊழல்களை வெறும் கடிதங்களாக மட்டும் எழுதாமல் அத்துடன் ஆதாரங்களையும் இணைத்திருந்தார்களாம் ரத்தத்தின் ரத்தங்கள். இப்போது அந்தக் கடிதங்களெல்லாம் ஒரு தனியார் ஏஜென்ஸிவசம் ஒப்படைக்கப்பட்டு, ஒன்றிய வாரியாகப் பிரிக்கப்படுகின்றன. ஒவ்வொரு ஒன்றியத்திலும், அராஜகம், அதிகார துஷ்பிரயோகம், தில்லுமுல்லு செய்து வருவதாகச் சொல்லப்படும் தி.மு.க. பிரமுகர்கள் பட்டியல் தயாரிக்கப்படுகிறது. மார்ச் 31-ம் தேதியிலிருந்து தேர்தல் பிரசாரம் செய்யும் ஜெயலலிதா, ஒவ்வொரு இடத்திலும் பேசும்போது அந்தப் பகுதி தி.மு.க. பிரமுகர்களின் வண்டவாளங்களை பிட்டுப் பிட்டு வைப்பாராம்.

வன்னியர் பொதுநல வாரியத்துக்கு தமிழக அரசு மீண்டும் உயிர் கொடுத்ததை ராமதாஸுக்கு எதிராக இருக்கும் வன்னியர் அமைப்புகள் இருகரம் நீட்டி வரவேற்கின்றன. இந்த அமைப்புகள் ஸ்டாலினைக் கூப்பிட்டு, சமீபத்தில் ஒரு நிகழ்ச்சியை நடத்தியதைத் தொடர்ந்து தமிழக அரசு இந்த நடவடிக்கையை எடுத்தது. தமக்கு எதிராகச் செயல்படும் வன்னியர் அமைப்புகளின் தோழமையை விரும்பிய ஸ்டாலின் மீது ராமதாஸ் கடுப்பாக இருக்கிறார். இருந்தும் புதுப்பிக்கப்பட்ட வன்னியர் வாரியத்தின் தலைவராக தமது ஆள் ஒருவரைப் போட வேண்டுமென்று தி.மு.க. தலைமைக்கு அழுத்தம் கொடுக்கிறாராம். தி.மு.க.வுடன் தேர்தல் கூட்டணி வொர்க் அவுட்டானால் நலவாரியத் தலைமையும் பா.ம.க.வுக்கே போய்ச் சேரும். இல்லையென்றால் தி.மு.க.வுக்கு இருக்கவே இருக்கிறார் ஜகத்ரட்சகன். ஆளவந்தார் அறக்கட்டளை, செங்கல்வராயன் அறக்கட்டளை என்று வன்னிய சமூகத்துக்குச் சொந்தமான ஆயிரக்கணக்கான கோடி சொத்துக்கள் இப்போது பலரால் அனுபவிக்கப்பட்டு வருகின்றன.

- ஸ்ரீநி



**மேஷம் :** வாக்குவன்மை மேலோங்கும். கடன் தொல்லை தீரும். உத்தியோகத்தில் இருந்து வந்த பிரச்னைகள் முடிவுக்கு வரும். மனைவி வழியில் சொத்து வந்து சேரும். குழந்தை பாக்கியம் உண்டாகும். ராசியான எண்: 3, 9. ராசியான கலர்: மஞ்சள், வெள்ளை. இந்த வாரத்தில் வெள்ளை நிற ஆடை அணிந்து சென்றால் நினைத்தது நடக்கும்.

**ரிஷபம் :** பணவசதி பெருகும். கல்வி வளம் மேன்மை பெறும். தேர்வில் அதிக மதிப்பெண் பெறுவீர்கள். குழந்தைகளால் மன மகிழ்ச்சி ஏற்படும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். கைப்பொருள் மீது கவனம் தேவை. ஆன்மிக பயணம் செல்லும் வாய்ப்பு கிட்டும். ராசியான எண் : 5, 6. கலர் : பச்சை, நீலம். நீலநிற ஆடை உடுத்திச் சென்றால் வெற்றி வந்து சேரும்.

**மிதுனம் :** குடும்ப வாழ்வில் இருந்து வந்த மனக்கசப்பு விலகி குடும்பம் ஒன்றுபடும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். வாகனத்தில் செல்லும் போது கவனம் தேவை. வழக்கிலிருந்து விடுதலை பெறுவீர்கள். பண வரவு சீராக இருக்கும். ராசியான எண் : 1,5. கலர் : சாம்பல் நிறம். வெளிர் நீல நிற ஆடை உடுத்திச் சென்றால் நினைத்தது நடக்கும்.

**கடகம் :** மனசுக்குள் இருந்து வந்த காதல், வெளிப்படத் துவங்கும். விலகிப் போன நண்பர்கள் விரும்பி வந்து சேர்வார்கள். கணவன்-மனைவி உறவு நன்றாக இருக்கும். வீடு / வாகனம் வாங்க ஏற்ற காலம். குழந்தைகள் மூலம் மன மகிழ்ச்சி ஏற்படும். ராசியான எண் : 1, 9, 3. கலர் : வெள்ளை, நீலம், மஞ்சள். வெள்ளை நிற ஆடை உடுத்திச் சென்றால் காரியம் சித்தி ஆகும்.

**சிம்மம் :** அநாவசியமான பேச்சுகள் ஆபத்திலேயே முடியும். மன உளைச்சல் ஏற்படும். வாகனத்தில் செல்லும்போது உஷார். தடைவிலகி திருமணம் கைகூடும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். குழந்தை பாக்கியம் கிட்டும். ராசியான எண்: 1,5. கலர்: சிவப்பு, பச்சை, நீலம். சிவப்பு நிற ஆடை உடுத்தி வந்தால் சிரமம் நீங்கும்.

**கன்னி :** குழந்தைகள் வழியில் சுபச் செலவு அதிகரிக்கும். குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். கடன் தொல்லை தீரும். படிப்பில் கவனம் தேவை. புதிய முயற்சி




**15.03.09 முதல்**
**21.03.09 வரை**

பலனளிக்கும். ராசியான எண் : 5, 6. கலர்: மஞ்சள். இந்த கலரில் ஆடை அணிந்தால் மங்களகரமான காரியம் சித்தியாகும்.

**துலாம் :** நீண்ட தூரப் பிரயாணம் செய்ய வேண்டியிருக்கும். வீடு மாற்றம் உண்டாகும். மனைவி வழியில் சொத்து வந்து சேரும். குழந்தைகள் படிப்பில் கவனம் செலுத்தவும். ராசியான எண் : 5, 6. கலர் : நீலம், பச்சை, சிவப்பு. நீலநிற ஆடை உடுத்திச் சென்றால் தொட்டது துலங்கும்.

**விருச்சிகம் :** செல்வாக்கு மிகுந்து காணப்படும். கல்வி வளம் நன்றாக இருக்கும். புண்ணிய தரிசனம் செல்வீர்கள். தூரதேச அழைப்பு வந்து வரும். குழந்தைகள் மூலம் சந்தோஷம் ஏற்படும். ராசியான எண்: 3, 9. கலர்: மஞ்சள். இந்த நிறத்தில் ஆடை அணிந்தால் எதிர்பார்த்த காரியம் வெற்றி அளிக்கும்.

# நடக்குமென்பார்; நடக்கும்!

**தனுசு :** குடும்ப வாழ்கை மகிழ்ச்சிகரமாக இருக்கும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். நண்பர் / உறவினர் மூலம் ஆதாயம் கிட்டும். புதிய தொழில் துவங்க ஏற்ற காலம். குழந்தைகள் மூலம் சந்தோஷம் ஏற்படும். ராசியான எண் : 1, 9. கலர் : மஞ்சள், வெள்ளை. சிவப்பு நிற ஆடை அணிந்தால் அதிர்ஷ்டம் கிட்டும்.

**மகரம் :** மனத்தெளிவு ஏற்படும். குரு பார்வை கோடி நன்மை அளிக்கும். வேலை பளு அதிகரிக்கும். தேர்வில் அக்கறையுடன் படிக்கவும். நீண்ட தூரப் பிரயாணம் செல்வீர்கள். ஆன்மிக தரிசனம் கிட்டும். ராசியான எண் : 5, 6. கலர்: நீலம். சாம்பல் நிற ஆடை அணிந்தால் அதிர்ஷ்டம் தேடி வரும்.

**கும்பம் :** நினைத்த காரியங்கள் நடந்தேறும். கடன் சுமை விட்டு விலகும். குழந்தைகள் மூலம் மனமகிழ்ச்சி ஏற்படும். கொடுக்கல் வாங்கல் திருப்திகரமாக இருக்கும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். ராசியான எண்: 5,6. கலர்: மஞ்சள். இந்நிறம் அதிர்ஷ்டத்தை அதிகரிக்கும்.

**மீனம் :** வேலையில் பதவி உயர்வு கிட்டும். ஆடை ஆபரணப் பொருட்கள் வாங்குவீர்கள். வீடு, மனை வாங்க ஏற்ற காலம். நண்பர் / உறவினர் மூலம் நற்செய்தி வந்து சேரும். திருமணக் காரியம் கைகூடும். கடன் சுமை தீரும். வழக்கு வெற்றி பெறும். எதிரிகள் விலகிச் செல்வார்கள். ராசியான எண்: 1, 3, 9. ராசியான கலர்: வெள்ளை நிறம் அதிர்ஷ்டத்தை அதிகரிக்கும்.

**தஞ்சை பரத்வாஜ்**

# காற்று வரும் பருவம்

எப்போதும் போல் இல்லை அந்தக் காலை. ஒருவிதமான அமைதி அலைந்து கொண்டிருந்தது. நடை வாசல், பட்டகசாலை, உள் அறைகள், மாட்டுக்காடி என்று எல்லாவற்றிலும் அந்த அமைதி புகுந்து கொண்டது. ஆள் இல்லாத அமைதி. ஆளை வாட்டும் அமைதி. அம்மாவும், ஐயாவும் கோச்சடைக்கு, பெண் பார்க்க அதிகாலையிலே கிளம்பி விட்டார்கள். அண்ணனும் அவர்களுடன் சென்று விட்டான்.

இந்த அமைதியைக் கோவிந்துக்குத் துணை வைத்துவிட்டு எல்லாரும் சென்று விட்டார்கள். வீட்டின் அமைதி தெருவுக்கும் தாவி விட்டது. ஏனோ தெருவும் இன்று அமைதி! இல்லாவிட்டால் மணலை அரைத்துக் கொண்டு கட்டை வண்டிகள் நகரும். கிரீச் கிரீச்சென்று கடையாணி ஓசை காதைக் குத்தும். கொய்யாப் பழக்காரி, வெள்ளரிப் பழக்காரி என்று அலைந்து கொண்டு இருப்பார்கள். இன்று ஒருவரையும் காணோம். கோவிந்துக்கு மனம் எதை எதையோ தொட்டுத் தழுவிக் கொண்டிருந்தது. அந்தத் தனிமையும் மௌனமும் மனசுக்குத் தோதாகப் போய்விட்டன. மனசு புலி மாதிரி உறுமிக் கொண்டு உலாத்திற்று. அந்த மௌனத்துக்குள் புகுந்து அலைந்திற்று. கண்ணை விழித்தவன் கண்ட காட்சி நம்ப முடியாமல் இருந்தது. நாடார் கடை வாசலில் பஞ்சு நின்றிருந்தாள். நடைவாசலில் இருந்தே அது தெரிந்திற்று. ஜிவுஜிவுவென்று அவன் உடம்பு சூடாயிற்று. அவளேதான். அவள் வந்து நேரம் கடந்து விட்டதோ? எத்தனை நேரத்தைத் தொலைத்தோம் என்று தெளிவில்லாமல் தவித்தான்.

தலைநிறைய எண்ணெய் போட்டு இழைய இழையச் சீவியிருந்தாள். பழுதில்லாத ஒரு சேலை. அதுவும் பளிச்சென்று இருந்தது. முகம் பளபளவென்று துலக்கினாற்போல் இருந்தது. கக்கத்தில் ஒரு ஓலைக் கொட்டான். கையில் ஒரு பாட்டில். அதன் கழுத்தில் கயிறு போட்டுக் கட்டி, கட்டைவிரலில் கவ்வியிருந்தாள். சோளம் வாங்க வந்திருப்பாள். நல்லவேளை நாடார் கடையில் இல்லை. ஒரு பொடிப் பையனை காவலுக்கு வைத்துவிட்டு, காலைச் சாப்பாட்டுக்குப் போய்விட்டார். அவள் வட்டத் தானிய வாளிகளைத் தொட்டுக் கொண்டே நின்றிருந்தாள். அடிக்கடி அவள் கண் இவன் வீட்டைத் தொட்டது. கோவிந்து மடமடவென்று வாசலுக்கு ஓடி வந்தான். அவன் கண்ணும் தடுமாறிற்று.

''எப்ப வந்தே?''

''வந்து நாழியாச்சு. உங்க கண் இப்பத்தான் திறந்ததோ...?''

''ஏதோ யோசனை!''

''நான் உங்க யோசனையிலே வந்தேன்.''

''சோளம் வாங்கவா?''

''சோளம் மட்டும் வாங்கவா இத்தனை




தூரம்?''

''அப்படியா...?''

''ரெண்டு மூணு நாளாக முழிச்சிருந்தது. முழி வீங்கிடுச்சு. தெரியுதா?''

''நெஜமாவா?''

''பொய்னு ஒண்ணு உண்டா? அதெல்லாம் எங்களுக்குத் தெரியாது.''

''நாடார்தான் இல்லையே. அவர் உண்டு

பாரதிபாலன்



## தொண்டருக்கும் தொண்டர்!

**மதுரைப் பகுதியில் உண்மையான பொதுத் தொண்டு செய்பவர்களை அழைத்து வந்து விருந்தளித்து ஒரு சான்றிதழையும் தந்து ஊக்குவிக்கிறார் டாக்டர் மீனாட்சி சுந்தரம். எம்.பி.பி.எஸ்., எம்.டி., டி.ஏ.எம்.ஏ. என அவர் பெயருக்குப் பின்னே பட்டங்கள் நீண்டாலும் மிக மிக எளிமையானவர். 'பொதுநலன் காவலர்கள்' என்ற அமைப்பை நிறுவி, பொதுத் தொண்டாற்று பவர்களுக்கு தன் கைப் பணத்தைச் செலவு செய்து 'சாதனையாளர் விருது' தருகிறார். "பொதுத் தொண்டாற்றுவோர் மனத்துக்கு உற்சாகமும் ஊக்கமும் இருந்தால் தொய்வின்றிச் செய்வார்கள். அதைத்தான் நான் செய்து வருகிறேன்'' என்கிறார்.**

**- இரா.கல்யாணசுந்தரம், மதுரை.**

முடித்துத் திரும்ப இன்னும் கால் மணி யாவது ஆகும். அந்தக் கால் மணி நமக்குப் போதும். ஏதாவது பேசலாம்.''

''ம்ஹூம். முடியாது!''

இத்தனையும் வாய் பேசவில்லை. கண்தான் பேசிற்று. பக்கத்தில் போய் நின்று பேசிவிடலாம். எந்தத் திசையில் கழுகு காத்திருக்குதோ? இது எல்லாமே சொல்லாக உருவெடுத்தவைதான். பார்வையாக ஒழு கிற்று. கண்ணில் ஈ புகுந்தால் கூடத் தெரி யாது. அவளின் நாணமும் புன்முறுவ லும்... அவன் ஒளிந்து கொள்ள ஒரு இடம். அலையலையாய் எழும்பும் வேகத்தை மட்டுப்படுத்த ஒரு இடம். மனசு பொங்கு வதைப் புதைத்து வைக்க ஓர் இடம். அந்தப் புன்முறுவல்தான். அந்த நாணம்தான்! எத் தனை பேர் இருந்தாலும் எத்தனை பேர் பார்த்தாலும் அதை மட்டும் ஒளிக்க மாட் டாள். அதைப் படித்துப் புரிந்து கொள்கிற படிப்பு அங்கு ஒருவருக்குமில்லை என்ற தைரியமோ என்னவோ?

''என்னம்மா வேணும்?'' நாடார் வந்து விட்டார்.

''சோளங் கொடுங்க.''

அவர் ஒரு படி நாழியைத் தூக்கிக் கொண்டு இறங்கினார். கோவிந்து அவ ளுக்கு ஜாடை காட்டினான்.

அளந்து போட்டார். பாட்டிலில் எண் ணெயை ஊற்றி, வழிந்த எண்ணெயை ஆட்காட்டி விரலால் தடவி தலையில் இழுத்துக் கொண்டார்.

''வேற...?''

கோவிந்து கடைக்கு ஓடினான்.

''நாடாரே, புனுகு இருக்கா பாருங்க.''

அவர் பின்பக்க மறைவுக்குப் போனார். கோவிந்துவுக்குத் தோதா போயிற்று! ''எங்க வீட்டுப் பின்பக்கமா வா'' அவளுக்கு மட்டும் கேட்கும் குரலில் கசிந்தான்.

''அதெல்லாம் வேண்டாம்'' என்று பதறி னாள். ''அவசியம் வரணும் ஒருத்தரு மில்லை'' என்று அழுத்தம் கொடுத்தான். நாடார் ''காணலெயே தம்பி'' என்று திரும் பினார். இவன் 'என் காரியம் முடிந்தது' என்று திரும்பி திண்ணையில் நின்று கொண்டான்.

''என்ன சொல்றே...?''

''வேண்டாமே...''

''வர்றீயா இல்லையா?''

''கடவுளே! அப்புறம் நான் என்ன சொல்ல...?''

இதுவும் வார்த்தை கிடையாது. நெருக் கடியில் நெஞ்சில் இருப்பதைச் சொல்ல பாஷையா முக்கியம்? என்ன பாஷை அது? யாருக்குத் தெரியும்? உதடு, மூக்கு, கண், நெற்றி, கை எல்லாமே குரலெடுக்கும் போது, அதை என்ன பாஷை என்று சொல் வது? ஒவ்வொன்றும் ஒவ்வொரு பாஷை தான். எப்படியோ சங்கதி போய் விடு கிறது.

ஒருக்களித்திருந்த கொல்லைக் கதவைப் பஞ்சு திறந்தாள். எதிரே பதற்றத்துடன் கோவிந்து. 'ஒருத்தருமில்லை' என்று அவன் குரல் ஒழுகிற்று. அவள் வியப்போடு பார்த்தாள். கால் நடுக்கம் கொடுத்தது. 'வா. சும்மா வா' என்றான். அவள் உள்ளே நுழைந்ததும், கதவை அகலத் திறந்து வைத்து விட்டான். நிம்மதி. நடைவாசலுக்கு வரும்போது கால் கூசிற்று. 'இங்க எல்லாம் ஆள் இல்லாதபோது கால் வைத்துக் கொண்டால்தானே ஆச்சு?' என்று மனசுக்குள்ளே கூறிக் கொண்டாள்.

வீட்டை மிரட்சியோடு பார்த்தாள்.

''எல்லாம் ஊருக்குப் போயாச்சு.''

''எங்கே?''

''பொண்ணு பார்க்க.''

''ம்.'' யாருக்கு என்று கூடக் கேட்கத் தோன்றவில்லை.

''சாப்பிடறீயா...?''

''கிளம்புறேன்.''

''எதுக்கு இப்படிப் பறக்கிறே?''

''ஒரே நடுக்கமா இருக்கு. வேண்டாம் போயிடுறேன்.''

''சோளம் வாங்கவா?''

''ராவுக்கு சோளக் கஞ்சி.''

''அரிசி இருக்கு தரட்டுமா?''

பஞ்சு அவன் முகத்தைப் பார்த்தாள். பஞ்சுவின் முகம் கோணிச் சுருங்கிற்று.

''திடீர்னு மாறிட்ட பஞ்சு இப்ப?''

''இப்பனா?''

''உள்ற வந்ததும்.''

''எப்படி இருக்கேன்?''

''உன் முகம் கடுகடுன்னு ஆயிட்டது. எப்போதும் ஒட்டியிருக்கும் சிரிப்பைக் கூடக் காணலெ.''

''கொண்டித் தொழுவுலெ நிறுத்தினாப்புலெ இருக்கு எனக்கு.''

கோவிந்து முகம் விழுந்து விட்டது.

''வாரேன்'' என்று எழுந்து கொண்டாள்.

பொழுது இறங்கி விட்டது. ஊருக்குள் இருட்டு நுழையத் தொடங்கிற்று. ஐயர் வீட்டு வேப்பமரத்தில் காக்கைகளின் இரைச்சல். கோவிந்து திண்ணையில் வந்து உட்கார்ந்தான். மீனாட்சி சுந்தரம்பிள்ளை, தங்கப்ப நாடார், வீடுகளில் வாசல் தெளித்துக் கொண்டிருந்தனர். மாலையிலும் வாசல் தெளித்து, சிறு கோலம் ஒன்றைப் போட்டு விட்டு நகர்ந்தனர்.

நாகு சைக்கிளைத் திண்ணையில் சரித்து




**மதுரையில் உள்ள**
**சில தெருக்களின்**
**வினோத பெயர்கள்...**

சுடுதண்ணி வாய்க்கால் தெரு
தலைவிரிச்சான் சந்து
பழைய வெத்திலைக்காரன் சந்து
பத்து தூண் சந்து
குருவிக்காரன் சாலை
யானைக்காரன் சந்து
கொன்னவான் சாவடி
கான்சாய் மேட்டுத் தெரு

**- நௌஷாத், மதுரை**

விட்டு வந்தான்.

தெரு விளக்கு விட்டு விட்டு எரிந்தது. இருவரும் பேச உட்கார்ந்தனர். நேரம் போனதே தெரியவில்லை. சட்டென்று விளக்குகள் அணைந்தன. இருவரும் திடுக்கிட்டனர். 'என்னது மணி பத்தாச்சா?' பத்து மணிக்கு லைன் மாற்றுவார்கள். ஐந்து நிமிடம்தான். சடசடவென்று விளக்குகள் மீண்டும் எரிந்தன. இப்போது வெளிச்சம் கூடுதலாக இருப்பது மாதிரி இருந்தது.

கோவிந்துக்கு லேசான பயம். பொழுது சாயவே வந்திடுவோம் என்றார்கள். இன்னும் காணோம். மதியம் கிளம்பினால் கூட வந்துவிடலாம். ஒரு வேளை அக்கா அப்படியே திருவேடகத்துக்குக் கூப்பிட்டுப் போய் விட்டதோ? அப்படி என்றால் கூட அண்ணன் போகாதே. வயலை விட்டு, வரப்பை விட்டு, இந்த ஊரை விட்டு ஒரு பொழுதும் நகராதே.

தங்கராசு டைனமோ ஒளி. சட்டென்று பிரேக் போட்டு நிறுத்தினான். சைக்கிளில் உட்காந்தவாக்கில், ஒருக்களித்து ஒரு காலைப் பெடலிலும் மறுகாலைத் தரையிலும் வைத்திருந்தான். பூ வியாபாரி அவன். விடியற்காலை ஒரு கூடைப் பூவை எடுத்துக் கொண்டு கிளம்புகிறவன், இந்நேரம்தான் திரும்புவான். ஏழு ஊர்கள் சுற்றித் திரும்புவான்.

''என்னா ஒக்காந்நாச்சு?''

''சும்மா. வீட்டுலெ மருத போயிருக்காங்க. வரட்டும்னு.''

''காரெல்லாம் ஓடலெயே!''

''ஓடலையா?'' என்று அலறினான் கோவிந்து.

''அங்கிட்டு ஒரே கலாட்டாவாமுல்லெ. ஏழு எட்டு காரை நொறுக்கிப்பிட்டாங்களாம். ஒருத்தனைக் குத்திப்பிட்டாங்களாம். வீட்டுக்குத் தீ வெச்சிட்டாங்களாம்.''

''எந்தூர்லெ?''

''தெரியலெ. தேனிக்கு அந்தப் பக்கமா. இந்தப் பக்கமாண்டு தெரியலெ. நான் சின்னமனூர்லெ இருந்து வர்றேன்.''

''யார் சொன்னது?''

''நம்ம பிச்ச அண்ணன்.''

''பெரிய கலாட்டாவா?''

''அப்படித்தான். இந்த ரெண்டு மூணு நாளாவே ஒரு வடியாத்தேன் இருந்துச்சு. கோடாங்கிபட்டி, பூதிப்புரம், கோட்டூர் அங்குட்டு ஒரு மாதிரியாத்தேன் பேசிக்கிட்டுத் திரிஞ்சாங்கே.''

''கோவிந்து.. ரோட்டுப் பக்கம் போயிட்டு வரலாமா?'' நாகு.

''இருட்டுலெ எதுக்கு? ஆளுக கூட்டம் கூட்டமா நிண்டு பேசுதுக.''

அதற்குள் இரண்டு மூன்று கதவுகள் திறந்து விளக்கு போட்டு விட்டன. அங்கொன்றும் இங்கொன்றுமாய் நாய்கள் குரைக்கும் சப்தம். எங்கோ தூரத்தில் ஒரு நாய் அழுதது.

''ரெண்டு மூணு நாளாவே அப்படித்தேன்.'' ஒரு பெண் குரல்.

''ஆவாது...''

''நேத்து இருந்து அந்தத் தந்திக் கம்பிலெ ஆந்த வேற அலறுது.''

சலசலவென்ற பேச்சுச் சப்தம் கேட்டு தெருவில் சிறு கூட்டம் கூடிவிட்டது. எல்லாரும் தூக்கச் சடவாவே எழுந்து வந்தனர். மெயின்ரோட்டில் இருந்து வருபவர்களை மறித்து விசாரித்துக் கொண்டிருந்தனர். ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமாகச் சொல்லிக் கொண்டிருந்தனர். மணி பன்னிரண்டு. சட்டென்று விளக்குகள் அணைந்துவிட்டன. ஊரே இருளில் விழுந்துவிட்டது.

**(காற்று வீசும்)**

# இன்னொருவன்

கதை : குப்பை பொறுக்கும் ஒருவன், குபேரனாகும் கதை. அதைத் திரைக்கதையில் கொஞ்சம் திணறலோடு சொல்லியிருக்கிறார் இயக்குநர்.

ப்ளஸ்:

* படம் முழுக்க விவேகானந்தரின் பொன்மொழிகள்
* ஒரு பாட்டில் கோடீஸ்வரனாகாமல் படிப்படியாக ஏறுவது
* ஹீரோ, நடிப்பு சுமார் எனினும் திரைக்கதை தூக்கி நிறுத்துகிறது
* எம்.எஸ்.பாஸ்கரின் கதாபாத்திரத்துக்கு ஏற்ற நடிப்பு..
* ஆபாசம் திணிப்பு இல்லை
* சினிமாத்தனங்களை ஒதுக்கிய திரைக்கதை
* மணிவண்ணனின் வில்லத்தனம்
* பனகல் பார்க் மேட்டர்
* எம்.எஸ். பாஸ்கரின் சொந்தக் குரலில் 'நாய் நாய்' பாடல்

மைனஸ்:

* ஹீரோ, ஹீரோயின்தான் படத்தின் மைனஸ்
* பாடல்கள் சொல்லிக் கொள்ளும் ரகம் இல்லை.
* பின்னணி இசையும் சீனும் வேறு வேறு ட்ராக்கில் பயணிக்கின்றன
* ஒளிப்பதிவில் குழப்பம் அதிகம்
* எடிட்டிங் பரவாயில்லை (புதியவர்)
* ஃபைட் சீன்ஸ் 'சித்திரம் பேசுதடி'யை ஞாபகப்படுத்துகிறது (ஆக்‌ஷன் பிரகாஷ் சண்டைப் பயிற்சி)

இன்னொருவன் - இதயம் ஈர்க்கவில்லை

- தேவிஸ்ரீ

# சொல்

தாடித்தாத்தா
பறக்கிறார் காற்றில்
காலில்லை
கையில்லை
கழுத்தில்லை
உடம்பில்லை
கோலில்லை ஒரு
குறிக்கோளுமில்லை!
நரைத்த முடி அலைபாய
காற்றில் பறக்கும்
தலை மட்டுமே -
மேலும் கீழும்
பக்கவாட்டிலும்
இறங்க இடம் பார்த்து
பறக்கிறார் தாத்தா!
எங்கு பார்த்தாலும்
நீண்ட கரும் சாலைகள்

# வாசம்

திறந்த சாக்கடைகள்
மனிதத் தலைகள், வாகனங்கள்
கட்டிடங்கள், கான்கிரீட் கூரைகள்!
குனிந்து பார்த்து இறங்க மனமின்றி
குபீரென்று தள்ளிப் போகிறார்
பறந்தபடி -
பச்சையாய்க் கையகல
இடம் கிடைத்தால் போதும்
உட்கார்ந்து வேர்விட்டு
ஓங்கி வளர்ந்திடலாம்!
பறத்தலுக்கும் இறத்தலுக்கும்
இடையில்
ஜனனம் தேடி அலைகிறது
ஒரு
செடியின் ஆன்மா!

# தாடித்தாத்தா

தஞ்சாவூர்க்கவிராயர்

# பரமானந்தம் தருபவள்

முதன்முதலில் தோன்றிய பூதம் ஆகாசம். இதற்கு ஏதேனும் குணம் இருக்கிறதா என்றால், கிடையாது. ஆகாசம் எவ்வளவு நீளம்? எவ்வளவு அகலம்? என்ன நிறம்? என்பனவெல்லாம் எதுவும் சொல்லமுடியாது. பின்னாட்களில், ரசாயனக் கூறுகளில் ஒளி ஊடுருவுவதால், நீலநிறமாக அது தோன்றுகிறது என்பதை விஞ்ஞானிகள் உறுதிப்படுத்தியிருக்கின்றனர். ஆனால், ஆகாயத்துக்கென்று நிறம் கிடையாது. எந்தவிதமான நடவடிக்கையும் இல்லாமலிருக்கக்கூடிய அண்டப்பெருவெளி. அதைக் கற்பனை பண்ணிப் பார்ப்பதே கஷ்டம். நிர்க்குண பிரம்மம் என்று சொல்கிறோமே, அதுதான் அந்த ஆகாசம்! உருவம், நிறம், சுவை ஏதுமற்ற நிர்க்குண பிரம்மம். இந்த ஆகாசம் படிப்படியாக இறங்கி வரவேண்டும். அப்படி இறங்கி வரவேண்டுமானால் அதற்கு ஏதேனும் குணம் சேர்ந்தால்தான் முடியும். எங்கேயாவது ஓர் இடத்தில் சிறிது கட்டுப்பாடு அல்லது வரையறை வரவேண்டும் - சர்வ வியாபகமாக இருக்கக்கூடிய, நிர்க்குணமான ஒன்றை, இந்த இடத்துக்கு, ஒரு வரையறைக்குள் கொண்டு வரவேண்டுமானால், அதற்குக் கொஞ்சம்கொஞ்சமாகக் குணத்தைச் சேர்க்க வேண்டும். இங்கே என்ன ஆயிற்று, குணமே இல்லாமலிருந்த ஆகாசம், நாதம் என்கிற குணத்தைப் பெற்றது.

சப்தம் எப்படிப் பயணிக்கும்? அதற்கு ஏதேனும் பாதை இருந்தால்தான் பயணிக்க முடியும். வெறும் சூன்யத்தில் ஒலி பயணிக்க முடியாது. இந்த ஒலிப்பாதைக்கான வடிவமைப்பு வரவேண்டும் என்பதற்காக, அண்டவெளியில் சிறுசிறு துகள்களாகச் சேர ஆரம்பித்தன. அவ்வாறு துகள்கள் சேரச் சேரத்தான் ரூபம் அல்லது வடிவம் வரத் தொடங்கியது; அதிலிருந்து முதல் குணம் - நாதம் அல்லது ஒலியாகிற முதல் குணம் பரிணமித்தது.

இவ்வாறு நாதம் பிறந்த பிறகு ஒவ்வொரு தன்மையாகச் சேர்ந்தது. கொஞ்சம் கொஞ்சம் ரசாயன மாறுதல்கள் ஏற்பட ஏற்பட காற்று உருவாயிற்று. காற்றிலே பிராணவாயு, ஹைட்ரஜன் ஆகியன இருந்தன. அவற்றின் கூறுகள் இணைந்து - பிரிந்ததில் நைட்ரஜன் உருவானது. இன்னும் கூட சில கோள்களில் இந்த நைட்ரஜன் வாயு கிடையாது - உருவாகவில்லை; அல்லது வந்து சேரவில்லை. அதற்கான ரசாயன மாற்றம் இன்னும் நிகழவில்லை.

காற்று வந்த பிறகு, கூறுகளில் ரசாயன மாற்றம் பெருகி, அக்னி தோன்றியது. கண் பார்வைக்குப் புலனாகக்கூடிய தன்மை ஏற்பட்டது.

இவ்வாறு, குணங்களே அற்ற ஆகாயத்தில் படிப்படியாக குணங்கள் பரிணமித்துச் சேர்ந்துகொண்டன. கடைசியில் ப்ருத்விக்கு உரிய குணங்கள் எல்லாமே வந்து சேர்ந்துகொண்டன - ரூபம், ரஸம், கந்தம் என்று எல்லாக் குணங்களும் சேர,

நிர்க்குணமாக இருக்கக்கூடிய பிரம்மம் இறங்க இறங்க ஸகுணமாக - பல குணங்களோடு இருக்கக்கூடிய தன்மைக்கு வந்தது.

## தகராகாச க்ஷேத்திரம்

பஞ்சபூத சிவ க்ஷேத்திரங்களாக நாம் சொல்பவை: ஆகாச க்ஷேத்திரம் - சிதம்பரம், வாயு - காளஹஸ்தி, அக்னி - திருவண்ணாமலை, அப்பு அல்லது ஜல க்ஷேத்திரம் - திருவானைக்கா, ப்ருத்வி க்ஷேத்திரம்-காஞ்சிபுரம். (திருவாரூர் என்றும் சொல்வதுண்டு.)

சிவ க்ஷேத்திரங்களுள் ப்ருத்வி க்ஷேத்திரமான காஞ்சிபுரமே, அம்பாள் க்ஷேத்திரங்களுள் ஆகாச க்ஷேத்திரமாக இருக்கிறது. அம்பாள் இங்கேதான் தகராகாச ரூபிணியாக இருக்கிறாள். காஞ்சி காமாக்ஷி கோயிலில் இதை நன்கு பார்க்கலாம். காமாக்ஷி அம்மன் சன்னிதிக்கு வலது புறத்தில் - அம்பாளுக்கு வலதுகைப் பக்கத்தில் - ஓர் அம்பாள் திருமேனி தெரியும். கொஞ்சம் பக்கத்தில் போய்ப் பார்க்க வேண்டும். அந்தப் பக்கத்தில் இருக்கக் கூடிய அம்பாள்தான் தகராகாசரூபிணி!

அப்படியானால் என்ன அர்த்தம்? பிருத்வியாக இருக்கக்கூடிய அம்பாள்தான் ஆகாசமாகவும் இருக்கிறாள்; ஆகாசத்தில் இருக்கக்கூடிய அந்த நிர்க்குண பிரம்மம் தான் நமக்காக ப்ருத்வி வரைக்கும் ஸகுணமாக இறங்கி வருகிறது. இறங்கி வந்து, நமக்காக எல்லாவற்றையும் நடத்துகிறது.

ஆகாசம் என்றால் வெட்டவெளி; அதற்கு எல்லையே கிடையாது என்பது உண்மைதான் என்றாலும், அந்த வெட்டவெளியினுடைய சின்ன பாகமாவது மண்ணிலேயும் இருக்கிறது! மண்ணை அளைந்து பார்த்தால், அங்கங்கே, மண் கட்டிக்கு நடுவே, சிறு மண்கூறுகளுக்கு நடுநடுவே வெற்றிடம் என்பது நிச்சயமாக இருக்கும். அப்படியானால், அண்டவெளியில் இருக்கக்கூடிய சூன்யம் இங்கே மண்ணிலும் பிரதிநிதித்துவம் பெற்றுவிடுகிறது அல்லவா! அதேமாதிரி அந்த அண்ட வெளியானது, தண்ணீருக்கு நடுவிலேயும் நெருப்புக்கு நடுவிலேயும் பிரதிநிதித்துவம் பெற்றுத் திகழ்ந்து கொண்டுதான் இருக்கிறது. காற்றும் இப்படித்தான் - சில இடங்களில் இலேசாக, மற்ற இடங்களில் கனமாக இருக்கிறது. அதனிடையே வெளிப்பிரதேசம் இருப்ப தையே இது உணர்த்துகிறது.

இதே ரீதியில்தான், ஆசார்யர் ஆதிசங்கரர் சொன்னது போல, ஆகாசம், மனித உடலமைப்பின் ஸஹஸ்ரார பத்மத்திலும் இடம்பெறுகிறது.

பரபிரம்மமாக இருக்கக் கூடியது முழு ஆகா

**பரபிரம்ம ஸ்வரூபிணியாக இருக்கிறாளே, அவளே இந்த ஜீவனைப் படிப்படியாக உயர்த்திக் கொண்டே போய், அந்த பரபிரம்மத்தோடு சேர்த்து வைக்கிறாள்.**

சம். அதன் பிரதிநிதித்துவம் ஆக்ஞா சக்கரத்திலேயும் விசுத்தி சக்கரத்திலேயும் இருக்கிறது. ஹ்ருதயஸ்தானத்திலேயும் இருக்கிறது. நம் ஹ்ருதயஸ்தானத்தில் பிரதிநிதித்துவம் பெற்று விளங்குகிற ஆகாசத்திலேதான் அம்பாள் இருக்கிறாளாம். அதனால்தான் தகராகாச ரூபிணி என்ற திருநாமம். இத்தனூண்டு இடத்துக்குள்ளே பரபிரம்ம ஸ்வரூபிணியாக இருக்கிறாளே, அவளே இந்த ஜீவனைப் படிப்படியாக உயர்த்திக்கொண்டே போய், அந்த பரம் பிரம்மத்தோடு சேர்த்து வைக்கிறாள்.

அம்பாள் என்கிற தழல் - அவளது ஜோதி ஸ்வரூப பிரகாசம் என் இதயத்திலே இருந்தால், என்னைக் கொண்டு போய் பரப்பிரம்மத்தோடு சேர்க்கிறபோது, எல்லா வெளியும் ஒன்றாகிவிடுகிறது. சிறியது



பெரியது என்கிற வித்தியாசம் அற்றுப் போய், என்னைப் பரமானந்தத்தில் செலுத்துகிறாள் அம்பாள். அப்படிப் பரமானந்தத்தைத் தரக்கூடியவள் தகராகாச ரூபிணி.

## கலைகளின் நாயகி

ஸ்ரீவித்யா உபாஸனையில் தகர வித்யா என்று ஒன்று உண்டு. அம்பாளை ஹ்ருதயத்தில் வைத்து, ஆகாச ஸ்தானமாக வழிபடுவதுதான் தகர வித்யா.

அப்படி வழிபாட்டுக்குரியவளாக இருப்பவளே **பிரதிவன் முக்ய ராகாந்த திதி மண்டல பூஜிதா** என்கிறது ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் இன்னொரு திருநாமம். பிரதிவன் என்றால் பிரதமை. பிரதமை தொடங்கி பல்வேறு திதிகள் - பௌர்ணமி வரைக்கும் - உள்ள திதிகள் புடைசூழ அவர்களால் பூஜிக்கப்படுகிறாள்.

அடுத்து வரும் திருநாமம் **கலாத்மிகா**. ரொம்ப ஆழமான திருநாமம் இது. பலவிதமான கலைகள் உண்டு. பொதுவாக பதினாலு சந்திர கலைகள் சொல்லப்படுகின்றன. பன்னிரண்டு சூரிய கலைகள். அது தவிர, அறுபத்து நான்கு ஆய கலைகள். இப்படி இருக்கக் கூடிய எல்லா கலைகளின் ஸ்வரூபமாகவும் இருக்கிறாள் அம்பாள்.

அது மட்டுமல்ல, ஜாக்ரதா நிலைமை, ஸ்வப்ன நிலைமை, ஸுஷுப்தி, துர்யம், ஸ்வப்னம் என்றெல்லாம் இருப்பு நிலைகள் குறித்துப் பார்த்தோம் அல்லவா...? அவை ஒவ்வொன்றுக்கும் உரிய கலைகள் இருக்கின்றன என்பதாகச் சிலர் ஏற்கிறார்கள்.

ஜாக்ரதா என்றால் எழுந்திருக்கிற (விழிப்புறுகிற) முறை. எழுந்திருக்கும் போதே நினைத்துக்கொண்டு எழுந்திருப்பது, தூங்காமலே விழித்திருப்பது - இவையெல்லாம் ஜாக்ரதா கலைகள் என்று பெயர். இப்படியே எல்லா நிலைகளிலும் பல்வேறு கலைகள் வர்ணிக்கப்படுகின்றன. இந்த சகல கலைகளின் ஜீவனாகவும் இருக்கக்கூடியவள் கலாத்மிகா. இசைக் கலை, ஓவியம் போன்ற வெளிப்படையான கலைகளின் ஆத்மாவாகவும் அம்பிகையே இருப்பதாலும் அவள் கலாத்மிகா.

(வளரும்)

● கலோசனா, சென்னை

***சமீபத்தில் தங்களைப் பிரமிக்க வைத்தது எது...?***

தமது முந்தைய நாடகமான 'கநேசி அய்யரி'ல் ஒய்.ஜி.மகேந்திரா காலச் சக்கரத்தில் கதாபாத்திரங்களை ஏற்றிக்கொண்டு, பின்னோக்கிச் சென்று வியக்க வைத்தார். 'வியட்நாம் வீடு' நாடகத்தில் நடிப்பு என்னும் காலச்சக்கரத்தில் ஏறிக்கொண்டு, முன்னோக்கிச் சென்று நடிகர் திலகத்தை நம் முன் நிறுத்தி, நம்மைப் பிரமிக்க வைக்கிறார்.

இது ரீமிக்ஸா, ரீ-மேக்கா என்றால் இரண்டுமில்லை. நடிகர் திலகத்தின் 'வியட்நாம் வீடு' வால்மீகி ராமாயணம் என்றால், ஒய்.ஜி. மகேந்திராவின் 'வியட்நாம் வீடு' கம்பராமாயணம்.

ஒய்.ஜி. மகேந்திரா சிவாஜி. மகேந்திராவாக ஜொலிக்கிறார். இது விமர்சனம் அல்ல; ஒரு நல்ல நாடகத்தின்பால் நான் கொண்ட கரிசனம். தமிழ் நாடகக் கோயிலுக்கு ஒய்.ஜி.எம். கும்பாபிஷேகம் செய்திருக்கிறார் என்றால் மிகையாகாது.

● சுவாமி, டெல்லி.

***கேள்விக்குப் பதில் தெரியவில்லை என்றால் யாரைத் துணைக்கு அழைப்பீர்கள்...?***

திருப்பதி ஏழுமலையானைத்தான். ''வினா வேங்கடேசம் வராயோ வராயோ... விடை வேங்கடேசம் தராயோ தராயோ''

● மனோகரன், பெங்களூர்.

***அமெரிக்காவில் காந்திஜி பயன்படுத்திய கண்ணாடி, கால் செருப்பு, சாப்பிட்ட பாத்திரம் இவற்றை ஏலம் விடுவதாக இருந்தார்களாமே...?***

நமக்குத் தேவை காந்தியின் கண்ணாடி அல்ல. அவரது தீர்க்கதரிசனம். கால் செருப்பு அல்ல. அவர் காட்டிய பாதை. காந்தி சாப்பிட்ட பாத்திரம் அல்ல. சாப்பிடாமல், உயர்ந்த லட்சியத்துக்காக உண்ணாவிரதம் இருந்த காந்தி என்ற நற்குண கதாபாத்திரம்.

● லெமூரியன், திருவண்ணாமலை

***கடவுள் இந்துவா,***



● 'வியட்நாம் வீடு' நாடகத்தில்...

**முஸ்லிமா, கிறிஸ்துவா...?**

தித்திப்பு சர்க்கரையா, சீனியா, ஷுகரா...? மைசூர் பாகை எந்த ஊரில் யார் செய்தாலும் அது மைசூர்பாகுதான்...!

● **ஆர். கோபாலன், மேற்கு மாம்பலம்.**

***மிஸ்டர் பீனின் மௌன நகைச்சுவையை ரசிப்பதுண்டா...?***

ஆடையில்லாமல் ஓட்டலில் மாட்டிக் கொள்ளும் மிஸ்டர் பீன் அடிக்கும் லூட்டி அட்டகாசம். இருந்தாலும் மிஸ்டர் பீன் அட்லீஸ்ட் மிஸ்டர் 'கௌபீன்' ஆக வந்திருக்கலாம்.

● **ராணிமேரி, வேலூர்**

***மனைவியை ஏன் 'இல்லாள்' என்று கூறுகிறோம்...?***

பெண் திருமணத்துக்குப் பின் தமக்கென எதையும் வைத்துக் கொள்ளாமல், 'இல்லா'ளாக இருந்து கணவன் குழந்தைகளுக்குக் கொடுத்து அவர்களை 'இருப்பவர்களாக' ஆக்குவதால்.

''உங்களைக் கட்டிக்கிட்டு என்னத்தைக் கண்டேன். நகை இல்லை. நட்டு இல்லை. சினிமா இல்லை, டிராமா-பீச்-ஓட்டல் இல்லை'' என்று சொல்வதாலும் 'இல்லாள்' ஆகிறாள்.

● **வி.பி.கே.சரவணன், சின்னமனூர்**

***உங்களைக் கடவுள் படைத்தது எதற்காக...?***

பதிலாக...!

● **த. சத்தியநாராயணன், அயன்புரம்**

***மனிதனுக்கு 'வால்' இருந்திருந்தால்...?***

கிரிக்கெட் மேட்சில் நாணயத்துக்குப் பதிலாக அகப்பட்ட ஆளைச் சுண்டி எறிந்து Head or Tails பார்ப்பார்கள்.




# கிரேஸி மோகன்

● **என். சண்முகம், திருவண்ணாமலை**

***'விகடகவி'யைத் திருப்பிப் போட்டால் 'விகடகவி' என்றே வருகிறது. இதுபோல வேறு ஏதாவது மாடர்ன் உதாரணம் தர முடியுமா..?***

'எஸ்.எம்.எஸ்.'ஸைச் சொல்லலாம். திருப்பிப் போட்டால் மட்டுமல்ல, நாம அனுப்பிய எஸ்.எம்.எஸ். நாலு பேருக்குப் போயிட்டு நமக்கே திரும்பி வருவதால்...!

● **பி. ஸ்ரீநிவாசன், வடபழனி**

***Sister-Concern என்கிறோம்... இதிலும் பெண்களுக்குத்தான் முக்கியத்துவம் கொடுக்கிறோம்... ஏன்...?***

சுபாவமாக பெண்களுக்குத்தான். Concern அதிகம் பிரதர்...!

## அன்றும் இன்றும் என்றும்

# சிறையிலிருந்து 'கல்கி'

**1941** - மூன்றாவது சிறைவாசம், திருச்சி சிறையில். சிறையிலிருந்தவாறே, புத்தமங்கலம் கிராமத்தில், தம் தமையனாரின் பாதுகாப்பில் விடப்பட்டிருந்த தம் மனைவி ருக்மிணி, மகன் ராஜேந்திரன், மகள் ஆனந்திக்கு கல்கி எழுதிய கடிதங்கள் இவை. சிறையில் தாம் 'சிரமப்படுவதாக' ஓர் இடத்தில் கூடக் கோடி காட்டாமல், நகைச்சுவை இழையோட எழுதப்பட்ட கடிதங்கள்.

திருச்சி

22.2.1941

தம்பி ராஜேந்திரனுக்கு அநேக ஆசீர்வாதம்.

நீ சமத்தாக இருக்கிறாயா? தினம் பள்ளிக்கூடம் போகிறாயா? பள்ளிக்கூடம் போகும்போதும் வரும்போதும் ராமுவைத் தொந்திரவுபடுத்தக் கூடாது. சொன்னபடி கேட்க வேண்டும்.

ஆத்தில் எல்லாக் குழந்தைகளுடனும் சிநேகமாயிருக்க வேண்டும். யாரோடும் சண்டை போடக் கூடாது. பிச்சை சௌக்யமாயிருக்கிறானா? தினம் பொழுது விடிந்ததும் உன்னைப் பார்ப்பதற்கு வருகிறானா?

பாலர் மலர் படிக்கிறாயா? கதை எல்லாம் நன்றாயிருக்கிறதா? அடுத்த தடவை நீ என்னைப் பார்க்க வரும்போது ஒரு நல்ல கதை சொல்ல வேண்டும். சொல்லாவிட்டால் கன்னத்தில் ஓர் அடி கொடுப்பேன் தெரியுமா?

**இப்படிக்கு, அப்பா**

திருச்சி

22.2.1941

குழந்தை ஆனந்திக்கு, அநேக ஆசீர்வாதம்.

நீயும் தம்பியும் வந்து விட்டுப் போன

---

**ம**துரையில் வைகையின் தென்கரையில் அமைந்துள்ள பேச்சியம்மன் கோயில் மிகவும் சக்திவாய்ந்த அம்மன் கோயிலாகும். இந்த அம்மனின் பெயரைக் கொண்டே சிம்மக்கல் பகுதியிலிருந்து வைகை நதிக்குச் செல்லும் பாதை, பேச்சியம்மன் படித்துறை ரோடு எனப் பெயர் வழங்கப்படுகிறது.

பல ஆண்டுகளுக்கு முன் சிறிய குடிலாக இருந்த கோயில் தற்போது பக்தர்களின் சீரியமுயற்சியாலும் அம்மன் அருளாலும் ராஜகோபுரம், துணை தெய்வங்கள், சுற்றுப் பிராகாரங்களுடன் விளங்குகிறது. செவ்வாய், வெள்ளிக் கிழமைகளில் பக்தர்களின் கூட்டம் கட்டுக்கடங்காமல் இருக்கும். ஆடி, ஐப்பசி மாதங்களில் திருவிழாக்கள் நடைபெறும்.



மதுரையில் பெயர் பெற்ற அம்மன் கோயில்களில் இதுவும் ஒன்றாகக் கருதப்படுகிறது. அருகிலேயே, ராகவேந்திரர் மடம் மற்றும் அனுமார் கோயில் அமைந்திருப்பது சிறப்பு.

– **நா. கோவிந்தராஜன், மதுரை.**

# அமரர் கல்கி



வாலாம்பாள் - நடராஜன் முதலியவர்களுடன் சண்டை பிடிக்கக் கூடாது. எல்லோருட னும் சிநேகமாயிருக்க வேண்டும்.

அம்மா ஊறுகாய் போட்டிருப்பதாக அன் றைக்குச் சொன்னாள். இன்னும் வந்து சேர வில்லை. இதுவரையில் அனுப்பாமலிருந்தால், அடுத்த தடவை நீங்கள் வரும்போது அவசியம் கொண்டு வரவும். அண்ணாவிடம் கூட 'ஊறுகாய் வருகிறது' என்று சொல்லியிருக்கிறேன்.

இந்தக் கடிதத்துக்கு நீ பதில் எழுதி சுப்புணி அண்ணாவுக்கு அனுப்பவும். அவர் என்னிடம் கொடுத்து விடுவார்.

இப்படிக்கு,
அன்புள்ள அப்பா

அன்றைக்கு எனக்குத் தூக்கம் வரவே யில்லை. வெகுநேரம் உங்களுடைய நினை வாகவே இருந்தது. நீங்கள் ரயிலிலும் வண்டியிலும் ஜாக்கிரதையாகப் போய்ச் சேரவேண்டுமே என்று கவலையாகவும் இருந்தது. ரயிலில் போகும்போது நீயும் தம்பியும் போட்டி போட்டுக் கொண்டு ஓரத்துக்குப் போகக் கூடாது. எட்டிப் பார்க்கவும் கூடாது. பெரியப்பா, அம்மா - இவர்கள் சொல்வதைக் கேட்க வேண்டும்.

பரதநாட்டியம் சரியாகக் கற்றுக் கொண்டு வருகிறாயா? நான் வருவதற் குள் நன்றாகக் கற்றுக்கொண்டு விட வேண்டும். மறுபடியும் நீ அடையாறு பள்ளிக்கூடம் போகும்போது, உன்னு டைய ஆட்டத்தைப் பார்த்து எல்லோ ரும் பிரமித்துப் போகும்படி இருக்க வேண்டும். ஸ்ரீமதி ருக்மிணிதேவி கூட, 'அடே அப்பா!' என்று ஆச்சரியப்பட வேண்டும். தெரியுமா?

படிப்பையும் மறந்துவிடக் கூடாது. பெரியப்பாவுக்கு ஒழிந்த போது அவரிடம் கணக்கு கற்றுக் கொள்.

ஆத்தில் பெரியம்மாவுக்குத் தொந்திரவு கொடுக்கக்கூடாது.



மதுரையில் பெஸ்ட்- இட்லி + வெரைட்டியான சட்னி + சாம்பார் சீப் அன்ட் பெஸ்ட்

வொர்ஸ்ட் - நடுரோட்டில் நடக்கும் நடைபயணிகள் மற் றும் நடைபாதை வியாபாரிகள்.

ஜாலியாகச் சுத்தறது - மீனாட்சி கோயில் தான்.

ஷாப்பிங் வேறெங்கே? விளக்குத்தூண், பத்துத் தூண் சந்து மற்றும் பட்டு நூல்காரர் கள் கடையில்தான்.



தலைபோற பிரச்னை - தண் ணீர்ப் பிரச்னையும், தொழிற் சாலைகள் அதிகமில்லாததும் தான்.

தீர்வு - அரசுதான் கடைக் கண் திறக்க வேண்டும்.

- கு.கல்யாணிபாய், நெல்லை.

"என்னடா... நீ பாட்டுக்கு கண்ணகி சிலைக்கு டிக்கெட் வாங்கற? நான் இன்னிக்கு காலேஜுக்குப் போகணும். என்னால வெளிய சுத்த முடியாது..." என் பின்னால் கேட்ட கொஞ்சல் குரல் என் கவனத்தைத் திருப்பியது. முழு உருவத்தையும் பார்க்கமுடியாவிட்டாலும் சற்றே மெலிந்த, சிறிய உருவம் என்பது தெரிந்தது. பக்கத்தில் நின்றிருந்த பையனுக்கும் இன்னும் முதிராத முகம். அவனும் கல்லூரி மாணவன் என்பது பேச்சில் வெளிப்பட்டது. ,

"உனக்கு உன்னைப் பத்திதான் கவலை. நேத்து உன்கூட வெளிய சுத்தற அவசரத்துல காலேஜ் நோட்புக்கை நாற்காலி மேல வெச்சிட்டு வந்துட்டேன். அதை அம்மாவும் அப்பாவும் எடுத்துப் படிச்சிட்டாங்க!"

த்ரில்லிங்கான ஒரு சிரிப்புடன் "ஹையோ... எந்த நோட்டு? என்ன படிச்சாங்க?" என்று அந்தப் பெண் கேட்க, "ஹ்ம்ம்... எல்லாம் நீ கிறுக்கி வெச்சிருந்தியே, 'ஐ லவ் யு டா... நீ ஒரு கெட்ட பையன்' இன்னும் என்னென்னமோ, அதெல்லாம்தான்." அந்த இரண்டுங்கெட்டான் பிள்ளைகளைச் சிறிது கவலையுடன் கவனித்தேன். இந்தத் தலைமுறை எங்கே போய்க் கொண்டிருக்கிறது? அவர்களது உரையாடல் தொடர்ந்தது...

"உன்னைப் பத்தி 'யாரு, என்னன்னு' கேள்வி கேட்டுக் குடைஞ்சிட்டாங்க. படிக்க வேண்டிய வயசுல நீயும் படிக்காம என்னையும் படிக்க விடாம என் வாழ்க்கையை நாசம் பண்ணிடுவியாம்! பெத்தவங்களுக்குப் பிள்ளைகளைப் படிக்க வைச்சு ஆளாக்க வேண்டியது கடமைதானே! என்னமோ நமக்காக எல்லாம் செய்யற மாதிரி ஒரு பாவ்லா! வந்த ஆத்திரத்துக்கு நேரா உன்னை இழுத்துகிட்டுப் போய் அவங்க முன்னாடி நிறுத்தி இவதான் அவ, இவளைத்தான் நான் கல்யாணம் பண்ணிக்குவேன்னு சத்தம் போடலாமானு தோணுச்சி."

"டேய், நிஜம்மாவே உங்க அம்மா அப்பா என்னை வேணாம்னு சொல்லிட்டா என்ன பண்ணுவே?" அந்தப் பெண்ணின் குரலில் கவலை.

"என் மேல உனக்கு நம்பிக்கையில்லே அப்படித்தானே! எனக்கு உன்னைவிட




# ஒரு பொண்ணு...

அப்பா அம்மாவா முக்கியம்? எல்லாரையும் தூக்கி எறிஞ்சிட்டு வந்துடுவேன். நம்ப எங்கயாவது போய் கூலி வேலை செஞ்சாவது பிழைச்சிக்கலாம்.'' உணர்ச்சி வசப்பட்டான் அவன்.

இதற்கு மேல் சும்மா இருக்க முடியாமல் என் அலைபேசியில் எண்களை ஒற்றி, வழக்கத்துக்கு மாறாகச் சத்தமாகப் பேச ஆரம்பித்தேன்.

''ஹலோ! நான்தான்டி சுபா... ஒரு நல்ல செய்தி. நான் உன்கிட்ட சொன்னேன் இல்லே, எங்க சித்தி பொண்ணைப் பத்தி, வீட்டை விட்டுப் போன அந்தப் பொண்ணு திரும்ப வந்துட்டா... பாவம் அவ அப்படி ஒரு நிலைமைல வருவான்னு அவங்க யாருமே எதிர்பார்க்கலே! நேத்து பழகின ஒருத்தனை நம்பி இத்தனை நாளா உயிரைக் கொடுத்து, பாசத்தைக் கொட்டி வளர்த்த அப்பா, அம்மாவை ஒரு நிமிஷத்துல மறந்துட்டுப் போயிட்டா... அவ போனதுக்கப்புறம் அவங்க பட்ட பாடெல்லாம் எங்க தெரியப்போகுது?'' என் பின்னால் இருவரும் மௌனத்தில் உறைந்து நிற்பதைப் புரிந்துகொள்ள முடிந்தது.

''அட போனவ போனா... அதுக்குன்னு ஒரு வயசு இருக்கில்லே! காலேஜ்ல படிக்கற வயசுல என்ன தெரியும்னு இப்படி ஒரு முடிவுக்கு வர்றாங்கன்னே புரியலே!

அசட்டுத் துணிச்சல்ல ஊரை விட்டு ஓடி, கடைசியில பிழைக்கக் கூட வழி தெரியாமல் கோழைத்தனமா தற்கொலை பண்ணிக்கிட்டவங்க எத்தனை பேர்?!'' ஆவேசத்தில் மூச்சு வாங்கியது!

சற்று நேரம் எதிர்முனையில் பேசுவதைச் செவிமடுத்தேன்!

எதிர் நீச்சல் போடற தைரியமில்லாம அவன் இவளை நட்டாத்துல விட்டுட்டுப் போயிட்டான்



''நீ சொல்றதை நான் மறுக்கலே சுபா! காதலிச்சி வீட்டை விட்டு வெளியேறி கல்யாணம் பண்ணிக்கிட்டு நல்லபடியா வாழ்ந்து காட்டினவங்களும் இல்லாம இல்லே! அநேகமா அவங்கல்லாம் வாழ்க்கைய எதிர்கொள்ற முதிர்ச்சியோட, துணிச்சலோட போராடினவங்களா இருக்கும்.

இந்தப் பொண்ணையே எடுத்துக்கோ கஷ்டமோ நஷ்டமோ அவன் கூடவே சேர்ந்து வாழணும்னு நினைச்சா! உழைக்கற தெம்பில்லாம, எதிர்நீச்சல் போடற தைரியமில்லாம அவன் இவளை நட்டாத்துல விட்டுட்டுப் போயிட்டான். யார் செஞ்ச புண்ணியமோ, பெத்தவங்க கிட்ட வந்து சேர்ந்துட்டா...'' ''என் குரல் தடுமாறியது. என்னைச் சுற்றிலும் கனத்த மௌனம் நிலவியதை உணராமல் யோசனையில் ஆழ்ந்து போனேன்.

''தள்ளும்மா... வழியில நின்னுக்கிட்டு... ஸ்டாப்பிங் வந்துடுச்சில்லே!'' யாரோ இடித்துத் தள்ளியதும் உணர்வுக்கு வந்தேன். பேருந்து புறப்படும்போதுதான் பார்த்தேன். அந்தப் பெண் மட்டும் இறங்கி யோசனையான முகத்தோடு கல்லூரிக்குள் செல்வதை.

தொலைபேசியில் யாரிடமோ பேசுவது போல் நடித்து என் உள்ளக் குமுறல்களைக் கொட்டியது பலன் தந்து விட்டது போல் தெரிகிறதே!

# ஒரு பயணம்... ஒரு காதல்...!





★ சேஷசாயி

# தேவை: இளைஞர்களை

"சாக்ரடீஸ் ஒரு பெரிய கடைக்குள் சென்று தங்க நகைகள் தொடங்கி அங்கே விற்பனைக்கு வைக்கப்பட்டிருந்த பலவித மான பொருட்களையும் ஒவ்வொன்றாகப் பார்த்துக்கொண்டே வந்தார். அருகில் இருந்தவர், "தத்துவ மேதையான நீங்கள் இதையெல்லாம் ஆர்வமாகப் பார்க்கிறீர் களே?" என்று ஆச்சரியமாகக் கேட்க, "இவற்றுள் எந்தெந்தப் பொருட்கள் இல்லாமலே வாழ்க்கை நடத்த முடியும் என்று பார்த்துக் கொண்டிருக் கிறேன்" என்றாராம் சாக்ரடீஸ்!

இன்றைக்கு இருக்கும் வாங்கிக் குவிக் கும் மனோபாவத்தைக் கிண்டல் செய்யும், இந்த சுவாரசியமான சம்பவத்தைச் சொன்ன வர் அசோக் லேலண்ட் நிறுவனத்தின் நிர்வாக இயக்குனரான ஆர். சேஷசாயி. கடந்த ஞாயிறு அன்று (மார்ச் 8) சென்னை பாரதிய வித்யாபவன் அரங்கில் கல்கி சதாசிவம் நினைவு அறக்கட்டளை ஏற் பாடு செய்திருந்த விழாவில் கலந்து கொண்டு, 'உருகும் உலகப் பொருளாதார மும், நலியும் நிர்வாக நெறிகளும்' என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றியபோது தான் இதைக் குறிப்பிட்டார்.

சேஷசாயியின் உரையில் சில முக்கியத் துளிகள்...

★ இப்போது டிப்ரெஷன், ரெஸெஷன் (depression; recession) என்று இரண்டு வார்த்தைகள் அடிக்கடி பயன்படுத்தப் படுகின்றன. இரண்டுக்கும் என்ன வித்தி யாசம் என்று கேட்டால், தமாஷாக, 'மத்தவங்க யாருக்காவது வேலை போச் சுன்னா ரெஸெஷன்; உனக்கே வேலை போச்சுன்னா டிப்ரெஷன்' என்று சொல் வதுண்டு. 1930களில் ஏற்பட்ட மிகப் பெரும் பொருளாதாரத் தேக்கத்தைப் போல இப்போது நிலவும் உருகுநிலை அத்தனை மோசமாக இல்லை; ஆனால் இது அமெரிக்காவை மட்டுமின்றி உலகம் முழுவதையுமே பாதித்துள்ளது.



* மெகான் சார்பில் ஹரீஷ்.



* மாணவர்கள் ஜெயகிருஷ்ணன், ஷம்னா ஆகியோருக்கு உதவித் தொகை

● சுனாமி திடீரென்று வரும்; அதன் பாதிப்பு வெகுநாட்களுக்கு இருக்கும். இந்தப் பொருளாதார உருகுநிலையும் சுனாமி போலத்தான். உணவு தானியங்கள், கச்சா எண்ணெய் விலை உயர்வு உள்ளிட்ட பல பாதிப்புக்களை, கடந்த ஆறு மாதங்களுக்கு மேலாக உலகம் கண்டுவந்தாலும், அந்த எச்சரிக்கைகள் உதாசீனப்படுத்தப் பட்டன.

● சகட்டுமேனிக்கு கடன்... கடன்... தகுதி இருக்கிறதா? இல்லையா? என்றே பார்க்காமல் வாரிவழங்கப்பட்ட கடன்தான் இதற்கெல்லாம் மூலகாரணம். நிகர மதிப்பு ஒரு ரூபாய் என்றால் அதன் பேரில் முப்பது ரூபாய் வரை கடன் கொடுத்தால் பொருளாதாரம் என்ன ஆகும்? தனிநபர்கள் மட்டுமில்லாமல் அமெரிக்க அரசாங்கமே அதைத்தான் செய்தது. கொடுக்கப்படும் கடன் உற்பத்திக்குப் பயன்படுத்தப்பட்டு, பொருளாதாரத்தைப் பலப்படுத்துகிறதா என்று யாரும் பார்க்கவில்லை.

● முன்னாள் அமெரிக்க அதிபர் ரோனால்டு ரீகனும், பிரிட்டிஷ் பிரதமர் மார்கரெட் தாட்சரும் வலியுறுத்திய சந்தைப் பொருளாதாரக் கொள்கையைக் குறைசொல்ல முடியாது. முதலாளித்துவ பேராசையைக் கட்டுப்படுத்தாமல் போனது தான் பொருளாதார உருகுநிலைக்கு ஆணிவேர். பணம் பணத்தைத் துரத்த, சூதாட்ட பலூன் விரிந்துகொண்டே போனது. ஒரு கட்டத்தில் வெடித்துவிட்டது.

* பேருரையின் ரசிகர்கள்



# ஈர்க்கும் தலைமை

● எப்போதுமே மனிதனின் வாழ்க்கையில் தேவை இருந்துகொண்டுதான் இருக்கும். ஆகவே, மனிதன் ஆசைப்பட்டு, அந்த ஆசையை நிறைவேற்றிக்கொள்ள முனைவது தவறில்லை. அதுதான் பொருளாதார



* வரவேற்புரை: ராம்நாராயண்

வளர்ச்சியைச் சாத்திய மாக்குகிறது. ஆனால் பேராசைப்படுவது ஆபத்து. அந்தப் பேராசைதான் கண் மூடித்தனமாகச் சூதாட் டம் மாதிரி பணத் தைப் பெருக்கும் வழி களில் மனிதன் இறங்குமாறு தூண்டுகிறது.

● இந்தியப் பொருளாதாரம் இப்போது எதிர்கொள்ளும் சவாலை, உருகு நிலை (recession) என்று சொல்வதை விட வளர்ச்சி வேகத்தில் ஒரு தளர்ச்சி (economic slowdown) என்று சொல்வது பொருத்தமாக இருக்கும்.

● மகாத்மா காந்தியின், 'டிரஸ்டி ஷிப்' தத்துவம் கார்ப்பரேட் உலகத்துக்கு அத்யாவசியமானது.



* இனிய இறைவணக்கமாக 'எந்தையும் தாயும்' பாடுகிறார் பாரதி ராமசுப்பன்

கார்ப்பரேட் நிறுவனங்களின் நிர்வாகிகள் தங்கள் கம்பெனியில் புழங்கும் பணத்தை, தங்கள் பணமாக நினைக்காமல், தங்களிடம் பொதுநலன் கருதி ஒப்படைக்கப்பட்டுள்ள பங்குதாரர்களின் பணமாக நினைத்து நேர்மையோடு நடந்துகொள்ள வேண்டும். அப்போதுதான் முறைகேடுகள் இல்லாத நிர்வாகம் சாத்தியம்.

● இந்த உருகு பொருளாதார நிலையைக் கூட இந்தியா தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள முடியும். சீனா உள்ளிட்ட உலக நாடுகளின் மக்கள் தொகையில் முதியோர்களின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே போகும் நிலையில், இந்திய மக்கள் தொகை இளைய தலைமுறையை மிகுதியாகக் கொண்டிருக்கிறது. மேலும், இந்தியாவின் உற்பத்தியும், சேவைகளும் உள்நாட்டுத் தேவையைப் பெரிதும் நம்பி இருப்பதால் அவற்றுக்கு எப்போதுமே தேவை அதிகரித்துக் கொண்டே இருக்கும்.

இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி திட்டமிட்டபடி அதிகரிக்க வேண்டுமாயின், வலிமையான, ஸ்திரமான அரசாங்கமும், இளைஞர்களை ஈர்த்து ஊக்குவிக்கும் தேசத் தலைமையும் அவசியம். அத்தகைய அரசாங்கத்தால், அன்னிய முதலீடு



**கல்கி சதாசிவம் நினைவு அறக்கட்டளை ஆண்டுதோறும் அச்சு ஊடகங்களில் வெளியாகும் சிறந்த தமிழ் விளம்பரத்துக்கு ரூ. 10,000 பரிசும் பாராட்டுப் பத்திரமும் வழங்கி கௌரவித்து வருகிறது. இந்த ஆண்டு (2009) மெக்கான் எரிக்ஸன் விளம்பர நிறுவனம் உருவாக்கிய டாபர் ச்யவன்பிராஷ் விளம்பரம் சிறந்த விளம்பரமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது.**

களைத் தேவையான அளவுக்கு வரவழைக்கவும், வங்கிகளைப் பலப்படுத்தவும் முடியும்.

● இன்று நாட்டில் பல சட்டங்கள் இருக்கின்றன. ஆனால், தவறுகள் நிகழாமல் தடுக்க வெறும் சட்டங்கள் மட்டுமே போதாது. தவறுகளைக் கண்டு அனைவரும் தார்மிகக் கோபம் கொள்ள வேண்டும்; சிலர், ''எனக்குக் கெட்ட கோபம் வரும்'' என்பார்கள்; ஆனால், தார்மிக அடிப்படையில் நமக்கு எழும் கோபம் நல்ல கோபமே! 'ரௌத்ரம் பழகு' என்று பாரதியார் சொன்னது இதைத்தான்.

ஆங்கிலத்தில் உரையாற்றிய சேஷசாயி, அவ்வப்போது தமிழுக்கும் இடமளித்து, பொருளாதார நெறிமுறைகளுக்கும் நிர்வாக நேர்மைக்கும் எடுத்துக்காட்டாக சதாசிவம் - எம்.எஸ். தம்பதியின் வாழ்க்கையிலிருந்து பல சம்பவங்களை எடுத்துக் கூறினார். அடிக்கோடிட்டுக் காட்டுவது போன்ற இந்த உத்தி அவையோரை வெகுவாகக் கவர்ந்தது. சொற்சுவையும் பொருட்செறிவும்மிக்க பேருரையின் இறுதியில் அவையோர் எழுந்து நின்று நீண்ட நேரம் கரவொலி எழுப்பி சேஷசாயிக்குத் தங்கள் நன்றியையும் மகிழ்ச்சியையும் தெரிவித்தனர்.

**● இந்தியாவின் உற்பத்தியும், சேவைகளும் உள்நாட்டுத் தேவையைப் பெரிதும் நம்பி இருப்பதால் அவற்றுக்கு எப்போதுமே தேவை அதிகரித்துக்கொண்டே இருக்கும். ●**

தொகுப்பு: **எஸ்.சந்திரமௌலி**

படங்கள்: **ஸ்ரீஹரி**

உயர்நீதிமன்ற மோதல் சம்பவத்தைச் சுட்டிக்காட்டி, ''காவல்துறையும் வழக்கறிஞர்களும் நீதித் துறைக்கு இரு கண்களைப் போன்றவர்கள். இவர்கள் விட்டுக்கொடுத்து சமூக நிலைக்கு உதவ வேண்டும்'' என்று சொல்கிறார் சென்னை மாநகர முன்னாள் காவல்துறை ஆணையர் நாஞ்சில் குமரன். மேலும் சில கேள்விகளை அவர் முன் வைத்தோம்.

**வழக்கறிஞர்-காவல்துறை மோதல்களுக்கு, சென்னை நகர காவல் துறையின் இண்டலிஜன்ஸ் தோல்வி ஒரு காரணம் என்று சொல்லலாமா?**

''உயர்நீதிமன்றத்தின் உள்ளே நடந்த சம்பவங்கள், ஒரு ரகசிய சதிக்குப் பின்னே நடந்தவை அல்ல. அந்த நேரத்தில் எழுந்த கொதிநிலையின் வெளிப்பாடு. எனவே, திறந்த விவகாரமாகவே நடந்து வந்த உயர்நீதிமன்ற வழக் கறிஞர்களின் போராட்டம், வன்முறையாக மாறியபோது, அதைச் சந்திக்கவேண்டிய கட்டாயத்துக்கு உள்ளாக்கப்பட்டது காவல் துறை. இதில் இண்டலிஜன்ஸ் தோல்வி எதுவுமில்லை.''

**வன்முறையில் முதலில் இறங்கி காவல்துறையைத் தூண்டியவர்கள் வழக்கறிஞர்கள்தான் என்று ஸ்ரீகிருஷ்ணா அறிக்கை கொடுத்திருக்கிறார். ஆனால், காவல்துறை எல்லை மீறிவிட்டதாகவும் சொல்லியிருக்கிறாரே?**

''நீதிபதி அறிக்கையைக் குறித்து நான் விமர்சனம் செய்ய விரும்பவில்லை. நான் சம்பவம் நடந்த இடத்தில் இல்லை. இருந்தும் காவலர்கள் மட்டத்தில் ஒருவர் தாக்கப்படும்போது உடன் இருக்கும் மற்ற காவலர்கள் உணர்ச்சிவசப்படுவது இயற்கையே. ஆனால், நாம் அதை நியாயப்



## ''இப்போதிருக்கும் பயங்கரவாத சூழலில் உயர்நீதிமன்ற வளாகத்துக்குள் கண்டிப்பாக காவல்துறை இருக்கவேண்டும்!''

படுத்தக் கூடாது. காவல்துறை என்பது எந்தச் சூழலிலும், கண்ணியமான படையாக, வரம்புக்குள் செயல்பட வேண்டும். சட்டத்தைக் காப்பவர்களாக இருக்க வேண்டுமே தவிர, அதை மீறுபவர்களாக இருக்கக்கூடாது. காவலர்கள் மட்டத்தில், படைகள், கண்ணியமாக நடந்து கொள்ளப் பயிற்றுவிக்கப் பட்டாலும், கொந்தளிப்பான சூழல்கள் உணர்வுகளைத் தூண்டிவிடுகின்றன. காவல் துறை பணியே பலவிதமான அழுத்தங்களுக்கு உட்பட்டதுதான். அதிகமான நேரம் அதிகாரப் பிரயோகத்தில் செலவா



# "காவலர்களுக்கு சங்கம் தேவையில்லை!"

நாஞ்சில் குமரன்

கிறது. அவர்கள் குடும்பத்தோடு செலவிடும் நேரம் மிகமிகக் குறைவு.''

**காவலர்கள் கீழ் மட்ட ஊழியர்கள். ஆனால், அங்கே உயர் அதிகாரிகள் பலர் இருந்திருக்கிறார்களே?**

''உயர்நீதிமன்ற அமைப்பைப் பார்த்தால், சம்பவங்கள் ஒரே இடத்தில் மையம் கொண்டு நடந்ததாகத் தெரியவில்லை. ஆகவே, எந்த அதிகாரி எங்கே இருந்தார் என்று சரியாகத் தெரியாத நிலையில், எந்த ஓர் அதிகாரியையும் விமர்சனம் செய்து குற்றவாளியாக்குவது சரியல்ல. உயர் அதிகாரிகள் அங்கே இருந்ததால்தான் மோதல் உச்சகட்டத்துக்குப் போகாமல் தவிர்க்கப்பட்டது என்பது என் கருத்து.''

**காவல்துறை அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுக்கும்வரை கோர்ட் புறக்கணிப்பு தொடரும் என்று வழக்கறிஞர்கள் சொல்கிறார்களே?**

''இந்தச் சம்பவங்கள் துரதிர்ஷ்டவசமாக நடந்துவிட்டன. உச்சநீதிமன்ற ஆணைப்படி இணை கமிஷனர், துணை கமிஷனர்கள் மாற்றம் செய்யப்பட்டனர். இப்

போதைய போலீஸ் கமிஷனர் ராதாகிருஷ்ணன் மிகச் சிறந்த அதிகாரி. பல விருதுகளை வாங்கிய பெருமைக்குரியவர். ஸ்ரீகிருஷ்ணா அறிக்கையில் அவரைப் பற்றி தவறாக எதுவும் சொல்லப்பட வில்லை. இதுதவிர, உச்சநீதி மன்ற வழிகாட்டுதல்படி உயர்நீதிமன்றச் சம்பவங் களைக் குறித்து, தமிழக அரசு உயர்நிலை அதிகாரியைக் கொண்டு விசாரிக்க இருக் கிறது. ஸ்ரீ கிருஷ்ணா அறிக் கையின் அடிப்படையில் எந்தப் போலீஸ் அதிகாரி யையும் சஸ்பெண்ட் செய்யமுடியாது என்றும் உச்சநீதிமன்றம் சொல்லிவிட்டது. முழு அளவு நீதி விசா ரணை நடத்த உயர்நீதி மன்றத்துக்கு அதிகாரமும் வழங்கியிருக் கிறது உச்சநீதிமன்றம். இத்தனைக்கும் பிறகு கோர்ட் புறக்கணிப்பைக் கைவிடா மல், காவல்துறை அதிகாரிகள் மீது வழக் கறிஞர்கள் நடவடிக்கை கோருவது நியாய மற்றது.''



**“காவலர்களின் மனக்குறைகளைத் தீர்க்க உயர் அதிகாரிகள் நடவடிக்கை எடுப்பார்கள். எனவே அவர்களுக்கென்று தனி சங்கம் தேவையற்றது”**

***காவல்துறைக்குச் சங்கம் தேவையா?***

''காவலர்களின் மனக்குமுறல்களைத் தீர்க்க உயர் அதிகாரிகள் தக்க நடவடிக்கை எடுப்பார்கள். பணிச்சுமை காரணமாக மிகுந்த மன அழுத்தத்துக்கு காவலர்கள் ஆளாகிறார்கள். தமிழக அரசு காவலர்களின் பிரச்னை களைத் தீர்த்து வைப்பதில் மிகுந்த கவனம் செலுத்தி வருகிறது. காவல் துறை என்பது கண்ணியமான துறை. இங்கே ஒழுங்கும் கட்டுப் பாடும் மிகமிக முக்கியம். இந்த நிலையில் காவலர்களுக் கென்ற தனி சங்கம் தேவை யில்லை.''

*கமிஷனர் ராதாகிருஷ்ணன்



***உயர்நீதிமன்ற வளாகத்தில் போலீஸ் நுழைவதில் கட்டுப் பாடுகள் தேவையா?***

''இப்போதிருக்கும் பயங்கர வாதச் சூழலில், உயர்நீதிமன்ற வளாகத்துக்குள் (நீதிமன்ற அறைகளைத் தவிர) காவல் துறை கண்டிப்பாக இருக்க வேண்டும். நாளை ஏதேனும் அசம்பாவிதம் நடந்த பிறகு காவல் துறையைக் குறை சொல்லக்கூடாது.''

***வழக்கறிஞர்களும் காவல்துறையும் ஒருவருக்கொருவர் எதிரி களாகப் பார்த்துக் கொள்வது ஏன்?***

''இப்படி ஒரு நிலை நீடிக்கவே கூடாது. நான் கமிஷனராக இருந்த காலத்தில் வெடிக்க இருந்த பிரச்னைகளையும், வழக் கறிஞர்கள் மற்றும் நீதிபதிகளுடன் கலந்து பேசி சுமுகமாக்கியிருக்கிறேன். எனக்குத் தெரிந்து பல சீனியர் வழக்கறிஞர்கள் காவல்துறையுடன் நல்லிணக்கமாகத்தான் இருக்கிறார்கள். ஒருவரையொருவர் கலந்து பேசி இணைந்து செயல்பட வேண்டிய பொறுப்பு இரு தரப்புக் குமே இருக்கிறது. நீதித்துறையின் இரு கண்களைப் போன்ற இவர்கள், விட்டுக் கொடுத்து, சுமுகநிலை ஏற்பட பாடுபடவேண்டும்.

**- ப்ரியன்**

**படங்கள் : ஸ்ரீஹரி**

தமிழருவி மணியன், தம் மனச்சான்றை அருவியாகக் கொட்டித் தீர்த்து விட்டார். மனச்சான்றுள்ள எந்த காங்கிரஸ்காரரும் இதற்கு மறுப்பு கூற முடியாது.

- செ. சத்தியசீலன், கிழவன் ஏரி

வா.மு.கோமு பேட்டியில் எதைக் கேட்டாலும் உடைப்பதற்குத்தான், உடைப்பதற்குத்தான் என்றே கூறுகிறாரே...?!

- வானவில் மூர்த்தி, கூத்தப்பாக்கம்

தங்களது 'பல்லக்கு கார்ட்டூன்' மிகவும் அருமை. மக்களது சக்தி இருந்தால், நாம் எதற்காக மற்றவர்களைப் பார்த்துப் பயப்பட வேண்டும்?

- வி.ஜி. சத்தியநாராயணன், சென்னை

பகுத்தறிவுக் குடும்பத்திலிருந்து வந்தாலும் பக்திப் பாடல்கள் பாடுவதில் தவறில்லை என்று கூறும் கலைஞரின் பேரன் அறிவுநிதியின் பேட்டி அறிவுபூர்வமான உண்மை!

- த. சத்தியநாராயணன், அயன்புரம்

வழக்கறிஞர்கள் சங்கத் தலைவர் பால் கனகராஜின் பேட்டி ஒரு வழக்கறிஞரின் வாதமாகத் தெரிகிறதே தவிர, ஒரு பொறுப்புள்ள இந்தியக் குடிமகனின் பதிலாகத் தெரியவில்லை.

- பி.ஆர். மயிலப்பன், ஈரோடு

**திருத்தம்**

கல்கி (15.03.2009) இதழ் அட்டையில் பார் கவுன்சில் தலைவர் என்று அச்சாகியிருப்பதை உயர்நீதிமன்ற வழக்கறிஞர்கள் சங்கத் தலைவர் என்று திருத்தி வாசிக்கவும்.

- (ஆ-ர்)

காமத்தினாலே, பாபத்தைச் செய்வதனாலே ஜனனம் வருகிறது. கோபத்துக்குக் காரணம் ஆசை, காமம் - அவற்றை ஒழிக்க வேண்டும் என்னும் அருள்வாக்கு



# 'சிரிப்புதான் வருகிறது!'

ஆனந்தம் தருகிறது.

- ஏ.பி.எஸ். ரவீந்திரன், வள்ளியூர்

இப்போது ஹாட் டாப்பிக்காக இருக்கும் மூவரையும் 'யூத் ஐகான்'களாக்கியதில், உடையழகு நடையழகு ஃப்ரெஷ் பக்கங்கள் ஆனது.

- எஸ். பத்மனாபன், சென்னை - 88

பாலபாரதியின் எச்சரிக்கை சிலருக்கு வேடிக்கையாகத் தோன்றினாலும், அவர் கூறியதில் உண்மைகள் இருக்கத்தான் செய்கின்றன.

- ஆர்.ஏ.அமுதன், சென்னை - 10

''கட்சி கட்டளையிட்டால் கண்டிப்பாக மதுரை தொகுதி எம்.பி.யாகப் போட்டியிடுவேன்'' என்ற அழகிரி நேர்காணல் சிரிப்பை வரவழைத்தது...!

- பி. ஜெயபிரகாஷ், சர்கார்பதி

'ஆயிரத்தில் ஒருவன்' - தொடர் அடுத்த வாரம்.

அவரையே வரவழைப்போம்.

**கலைஞர்:** அவருக்குத் தமிழ் தெரியாதே?

**ஆற்காடு:** டீ.வி.யில அவர் படங்களுக்கு யார் டப்பிங் கொடுக்கறாங்களோ அவங்களை கூடவே வெச்சுப்போம். ஜாக்கியோட பேச்சுக்கு லோக்கல் பாஷையில டப்பிங் கொடுக்க வெச்சோம்னா கூட்டம் கைதட்டலுல அதிரும். ஜாக்கிசானும் நம்ம ஆளு தான் அப்படிங்கற மாதிரி நீங்க உடன் பிறப்புகளுக்கு ஒரு கடிதம் எழுதிடுங்க. மத்ததை நாங்க பார்த்துக்கறோம்.



# திருவாரூரில் ஜாக்கிசான்!

**நெருங்கிவிட்டது நாடாளுமன்றத் தேர்தல். யாருக்கு வேலை இருக்கிறதோ இல்லையோ, சினிமா நட்சத்திரங்கள் பிஸியாவது உறுதி. நமது கட்சிகளும் போட்டியிட்டு ஆட்களைப் பிடிக்கும். இரண்டு கட்சிகளின் அலுவலகம் பக்கமாகச் சென்று ஒட்டுக் கேட்டபோது...**

**தி.மு.க.**

*(கலைஞர், மு.க.ஸ்டாலின், ஆற்காடு வீராசாமி குழு தீவிரமான விவாதத்தில் இருந்தது.)*

**ஆற்காடு:** தலைவரே! நாம ஆளும் கட்சி. இந்த விஷயத்திலும் நம்ம பலத்தைக் காட்டணும். பிடிச்சா புளியங்கொம்புங்களாதான் பிடிக்கணும். எவ்வளவு செலவானாலும் பரவாயில்லை.

**மு.க.ஸ்டாலின்:** தசாவதாரம் கேஸட் ரிலீசுக்கு ஜாக்கிசான் வந்தாரே நினைவிருக்கா தலைவரே. கமல்கிட்டே சொல்லி

**கலைஞர்:** அதுக்கென்ன, ஆதியில் இந்தியாவும், சைனாவும் ஒன்றாகவே இருந்தன. ஜாக்கிசானின் தாத்தா திருவாரூர் வீதிகளில் விளையாடியிருக்கிறார். அவர் உடம்பில் ஒட்டிய மண் இப்போது அவரது பேரன் ஜாக்கிசானின் மனத்திலும் உள்ளதுன்னு அடிச்சு விடறேன்.

**மு.க.ஸ்டாலின்:** ஜாக்கி நடிச்ச படங்களோட டி.வி.டி.களை இலவசமா கொடுத்து இளைஞர்களை வளைச்சுடலாம். தாய்க்குலங்களை எப்படி கவர் பண்றது?

**ஆற்காடு:** சமீபத்துல ஆஸ்கர் விருது வாங்கிச்சே டைட்டானிக் நாயகி. அந்தப் பொண்ணை வரவழைப்போம். அந்தப் படத்தோட க்ளைமாக்ஸ் சீனை போற இடங்களில் எல்லாம் போட்டுக் காட்டு

வோம். தாய்க்குலங்கள் 'பொலபொல'ன்னு கண்ணீர் விட்டுடுவாங்க. அனுதாப வோட்டுக்களை அள்ளிடலாம்.

**கலைஞர்:** சபாஷ்! இந்த விஷயம் ரகசியமா இருக்கட்டும். அம்மையாரின் முகாமுக்குத் தெரியக்கூடாது.

*(அது எப்படி தெரியாமல் இருக்கும்? நாம் அங்கே போவதற்குள் செய்தி போய், அவசரக் கூட்டம் நடந்து கொண்டிருந்தது.)*

**அ.தி.மு.க.**

**பன்னீர்செல்வம்:** அம்மா, அவங்க எடுத்த எடுப்பிலேயே டாப்கியர் போட்டு ஹாலிவுட்டுக்குப் போய்ட்டாங்க. நாம அட்லீஸ்ட் பாலிவுட்லே இருந்தாவது ஆட்களை இறக்கணும்.

**ஜெயலலிதா:** அவ்வளவுதானே! ஷாருக்கான், ஆமீர்கான், சல்மான்கான் எல்லோருக்கும் ஃபோன் போட்டு வரச் சொல்லிடுங்க.

**சசிகலா:** சுலபமா சொல்லிட்டீங்க. கூப்பிட்டதுமே ஓடி வர்றதுக்கு அவங்க என்ன நம்ம கட்சி உறுப்பினர்களா? எல்லோரும் பிஸியா இருப்பாங்க அக்கா.

**ஜெயலலிதா:** ஒரு படத்துக்கு அவங்க எவ்வளவு வாங்குவாங்களோ அதுக்கு இரண்டு மடங்கா கொடுப்போம். ஆனா நேரத்தோடு பிரசாரத்துக்கு வரணும். பத்து மணி ஷூட்டிங்குக்கு மூணு மணிக்கு வர்ற மாதிரி வரப் போறாங்க.

**பன்னீர்:** அதை நான் பார்த்துக்கறேன்ம்மா. பிபாஷா, மல்லிகா

# கிண்டல் கூலனி

ஷெராவத், தீபிகா படுகோன் இவங்களையும் வரவழைச்சா தேர்தல் களைகட்டும்மா.

**சசிகலா:** பரவாயில்லையே, நம்ம கட்சி ஆட்களைத் தெரியுதோ இல்லியோ... இவங்க பெயர்களை எல்லாம் நல்லாவே தெரிஞ்சு வெச்சுட்டு இருக்கீங்க.

**பன்னீர்:** எல்லாமே நம்ம கட்சியோட வளர்ச்சிக்குதாங்க.

**ஜெயலலிதா:** எல்லாம் வடக்கு முகமாகவே இருக்கேன்னு மத்தவங்க பேசற மாதிரி வெச்சுக்கக்கூடாது. அதனால, இங்கே இருக்கறவங்களையும் வளைச்சுப் போடுங்க.

**பன்னீர்:** அதெல்லாம் நானே பார்த்துக்கறேன்ம்மா. இந்தத் தேர்தல்ல நாப்பதும் நமதுதாம்மா.

*(கேட்டுக் கொண்டிருந்த நமக்கு இதற்கு மேலும் தாங்காது எனத் தோன்றவே, பாதியிலேயே ஓட்டமெடுத்தோம்.)*

**- குசும்புராஜ்**



# சர்வம்
## சில துளிகள்

✱ படத்தின் இரண்டாவது பகுதி முழுக்க மூணாறில் படமாக்கப்பட்டுள்ளது.

✱ ஆர்யா இப்படத்தில் ஆர்க்கிடெக்ட் கதாபாத்திரத்தில் நடிக்கிறார்.

✱ படத்தில் மொத்தம் ஐந்து பாடல்கள். ரெட்ஹில்ஸ், கோவா, ராஜஸ்தான் போன்ற இடங்களில் படமாக்கப்பட்டுள்ளன.

✱ சிறகுகள்... எனத் தொடங்கும் பாடலை முழுக்க முழுக்க பனி சூழ்ந்த பகுதியில் படமாக்கியிருக்கிறார்கள். இரண்டு பாடல்கள் மட்டும் இரண்டரை வருடங்களுக்கு முன்பே டியூன் போடப்பட்டவை.

✱ இளையராஜா பாடியிருக்கும் பாடல் ஒரு கதாபாத்திரமாகவே வருகிறது. 'மேகம் கருக்குது... மழை வரப் பார்க்குது'... வரிகளில் சில, சுட்ட சூரியன்... பாடலில் இடம் பெற்றிருக்கிறது.

✱ யுவன் ஷங்கர் ராஜா, இப்படத்தில் இரண்டு பாடல்கள் பாடியுள்ளார்.

✱ தனது அடுத்த படம் குறித்து நடிகர் அஜித்துடன் விவாதத்தில் உள்ளார் இயக்குநர் விஷ்ணு வர்தன். 'சர்வம்'- தெலுங்கில் ரிலீஸாவதற்கான டப்பிங் வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன.





✱ மிதுன் சக்கரவர்த்தி, த்ரிஷா உள்ளிட்ட பிரபலங்கள் படத்தில் இடம் பெற்றுள்ளனர்.

✱ கதை இரண்டு விதமான கலர்களில் தயாராகியுள்ளது. முதல் பாதி ரொமாண்டிக்காகவும், பிற்பகுதி பயம் நிறைந்த த்ரில்லராகவும் உருவாகியுள்ளது. படம் இம்மாத இறுதியில் ரிலீஸ்.

✱ 'சர்வம்' படத்தை முதலில் தமது குருவான ஒளிப்பதிவாளர் சந்தோஷ் சிவனிடம் போட்டுக் காட்டி பாராட்டு பெற்றுள்ளார் இயக்குநர்.

– கிராபியென் ப்ளாக்

குரு கிருபா




# அசத்தலான உயர்தர திருமண சமையலுக்கு




# SARASWATHI
## CATERING SERVICE









**கல்யாணமா எங்களை கூப்பிடுங்க**
**நீங்களே பிரமிச்சுபோவீங்க**

**SARASWATHI**
**CATERING SERVICE**

Ellorukkum Favourite

*Insuvai Vendan* **G. Subramani Iyer**


No.65, (old no. 30), Subramanian St., West Mambalam, Chennai - 33.
Off: 24742433 / 23719535 Cell: 98400 54900 Tele Fax: 24742433
Branch off: Coimbatore Ph: (0422) 2343710
E- Mail: insuvaivendhan@yahoo.com www.saraswathicateringservice.com


*We undertake Marriage Catering all over India*

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 09 -11 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 09 - 11* Registered as a Newspaper in Srilanka.